# முதல் ஐந்து தமிழ் நாவல்கள்

க. நா. சுப்ரமணியம்

அமுத நிலையம்

# முதல் ஐந்து தமிழ் நாவல்கள்

1. வேதநாயகம் பிள்ளை

   பிரதாப முதலியார் சரித்திரம்

2. பி. ஆர். ராஜமையர்

   கமலாம்பாள் சரித்திரம்

3. அ. மாதவையா

   பத்மாவதி சரித்திரம்

4. S. M. நடேச சாஸ்திரி

   தீனதயாளு

5. தி. ம. பொன்னுசாமிப் பிள்ளை

   கமலாக்ஷி

# பொருளடக்கம்

# முன்னுரை

நான் பிற்காலத்தில் நாவல்கள்தான் எழுதப் போகி றேன் என்றோ, தமிழில் தான் எழுதப் போகிறேன் என்றோ தீர்மானமாவதற்கெல்லாம் முன், **1921**-ல், என் னுடைய ஒன்பதாவது வயதில் நான் தமிழ் நாவல்கள் படிக் கத் தொடங்கிவிட்டேன். மணிக்கொடி சகாப்தத்தில் தமி ழில் ஒரு மறு மலர்ச்சியும் புது விழிப்பும் ஏற்பட்டது போல, முதல் உலக மகா யுத்தத்திற்குப் பிறகு ஒரு நாலைந்து வருஷங்களிலும் ஏற்பட்டது என்று இப்போது எண்ணிப் பார்க்கும்போது எனக்குத் தெரிகிறது. அந்த மறுமலர்ச்சியினுல் பாதிக்கும்படியான பாக்கியமும் எனக் குக் கிடைத்தது.

அப்போது நான் முதல் பாரத்தில் படித்துக் கொண் டிருந்தேன். என் தாயாருக்குச் சித்தப்பா முறையான ராவ் பகதூர் எஸ். அப்பு சாஸ்திரியார் என்பவருடைய (கும்ப கோணம்) மேலக் காவேரி சர்வமானிய அக்கிரஹாரத்து வீட்டிலிருந்து படித்துக் கொண்டிருந்தேன். ராவ்பகதூர் எஸ். அப்புசாஸ்திரியார் கும்பகோணம் நேடிவ் ஹைஸ் கூலின் ஸ்தாபகர்; ஹெட்மாஸ்டர்; சர்வாதிகாரி. புதுசாக அப்போது ஏற்பட்டிருந்த ஆர்வத்துடன், தன் பள்ளிக் கூடத்துக்குத் தமிழ் புஸ்தகங்கள் வாங்கவேண்டு மென்று அப்போது தமிழில் வெளியாகியிருந்த பல புஸ்தகங்களையும் வரவழைத்திருந்தார். முதலில் அவை யெல்லாம் வீட்டுக்குத்தான் வந்து சேர்ந்தன. விசாலமான முன் கூடத்தில் ஒரு எட்டடி உயர ஐந்தடி அகலக் கண்ணுடி பீரோ கொள்ளாமல் தமிழ் புஸ்தகங்களே அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. அந்த பீரோவை என்னுல் இன்னமும் ஞாபகப் படுத்திக் கொள்ள முடிகிறது. அந்த பீரோவின் சாவி என் கைக்கு வந்து சேர்ந்தது.

அந்தச் சாவி என் கைக்கு வந்து சேர்ந்ததற்குக் காரணமுண்டு. அந்தச் சமயத்தில் இஞ்சிக் கொல்லை நடேச சாஸ்திரிகள் என்பவரின் பாகவத மொழி

பெயர்ப்பு (மாதம் ஒரு பாகமாக என்று ஞாபகம்) பச்சை அட்டை போட்ட சஞ்சிகைகளாக வெளியாகிக் கொண்டி ருந்தது. அதைத் தபாலிலிருந்து வாங்கி நான்தான் பிரிப் பேன்; பிரித்து என் பாட்டி (அதாவது ராவ்பகதூர் அப்பு சாஸ்திரியாரின் மனைவி-வாலாம்பாள் அம்மாள்)யிடம் வாசித்துக் கொண்டிருப்பேன். வாசித்து முடிந்ததும் பீரோவில் கொண்டுபோய் வைப்பேன். அதற்காக அந்தப் பீரோச் சாவி என்னிடம் வந்தது.

பீரோ நிறையப் புஸ்தகங்கள் இருந்தன. என் கையிலே சாவி இருந்தது. பாட்டிக்குப் படிப்பதைக் கேட்கப் போது பகலில் ஒரு மணி, இரவு ஒரு மணி-அவ்வளவுதான். நான் மற்ற நேரமெல்லாம், மற்ற புஸ்தகங்களை எடுத்து வாசிக் கத் தலைப்பட்டேன். இப்படி நான் வாசித்த முதல் நாவல் பண்டித நடேச சாஸ்திரியாரின் தீனதயாளு. அதைவிட பாகவதம் நன்றாக இருப்பதாக நான் நினைத்தேன் என்பது எனக்கு ஞாபகம் இருக்கிறது. இரண்டாவதாக நான் படித்த நாவல் என் மனத்தை முற்றும் கவர்ந்து விட்டது. அதில் வந்த கதாநாயகனின் பெயரும் தீனதயாளுதான். அது டூமாஸ் என்கிற பிரெஞ்சு நாவலாசிரியர் எழுதிய மாண்டி கிறிஸ்டோவின் தழுவல். யார் எழுதியது என்று எனக்கு ஞாபகம் இல்லை. அந்தச் சமயத்தில் நான் படித்த புஸ்தகங்கள் பலவும் ஆங்கிலத்திலிருந்து தழுவல்கள் என் பதைப் பின்னர்தான் அறிந்து கொண்டேன். முக்கியமாக கனகாம்புஜம் அல்லது கள்வனும் விலைமகளும் என்கிற நாவ லும், அயாஷா அல்லது ஐயாயிரம் வருஷம் வாழ்ந்த அரசி என்கிற நாவலும், இத்தனை நாட்களுக்குப் பிறகும் என் மனத்தில் பசுமையாகவே இருக்கின்றன. அவற்றின் மூலங்களை நான் இன்னமும் படித்ததில்லை; படிக்கவேண்டும் என்கிற ஆசையுமில்லை.

மேலக் காவேரியில் தாத்தா வீட்டில் இருந்த இரண்டு வருஷங்களில் நான் சுமார் முந்நூறு நானூறு தமிழ் நாவல்

களாவது படித்திருப்பேன் என்று இப்போது எண்ணிப் பார்க்கும்போது தோன்றுகிறது. அத்தனை நாவல்கள் அந்தக் காலத்தில் இருந்தனவா என்று கேட்டால் இருந்த மாதிரித்தான் இருக்கிறது என்று சொல்லுவேன். புதுப் புதுப் புஸ்தகங்கள் - பச்சையும் சிவப்பும் நீலமுமான அட்டைகளுடன் பார்க்கக் கண்ணைக் கவர்ந்த புஸ்தகமும் கையுமாக இருப்பது எனக்கு அந்த நாட்களில் ஏற்பட்ட பழக்கம் தான்; இன்னமும் என்னைவிடவில்லை அது. படித்ததை அடிக்கடி ஞாபகப் படுத்திக் கொண்டு சுவைக்கும் பழக்கமும் அப்போது ஏற்பட்டதுதான். மத்தியான்னம் சாப்பிட உட்கார்ந்ததும் தாத்தா "என்ன படித்தாய் ராஜா?" என்று கேட்பார். சாப்பிட்டு முடியுமுன் ஒரு நாவலைச் சுருக்கமாகச் சொல்லவும் பழகிக் கொண்டேன். இந்த நூலில் நான் எடுத்துச் சொல்கிற ஐந்து நாவல்களையும் அந்தச் சமயத்திலே படித்துவிட்டு, தாத்தாவுக்குச் சுருக்கிச் சொல்ல வேண்டிய அவசியமும் வந்தது என்பது எனக்கு ஞாபகமிருக்கிறது.

அதற்குப் பிறகு பல சந்தர்ப்பங்களில், இந்த ஐந்து நாவல்களையும் தேடிப் பிடித்து நான் படித்ததுண்டு. முதல் தடவை, இரண்டாவது தடவை...பத்தாவது தடவை என்று படிக்கும்போது கூட அவற்றில் நவ நவமான சுவைகள் காணக்கிடக்கின்றன என்பது அவற்றின் இலக்கியத் தரத்தை உயர்த்திற்று என்பது என் அபிப்பிராயம். குமுதத்தில் இந்தக் கட்டுரை வரிசையை வெளியிடுவதற்கு, ஆசிரியர் S. A. P. அண்ணாமலை ஏற்றுக் கொண்டதும், இந்த நாவல்களை மறுபடியும் தேடிப் பிடித்தும் சிலவற்றை வாங்கியும் படித்தேன். அச்சிலில்லாத **தீனதயாளு, பத்மாவதி, கமலாக்ஷி** மூன்று நாவல்களும் எனக்குக் கிடைக்க நண்பர் கி. ரா. உதவினார். நண்பர் கி. ரா. வுக்கும், ஜெமினி வாசகசாலைக்கும். இந்தக் கட்டுரைகளை வெளியிட்ட (எவ்வளவோ இட நெருக்கடியிலும்

வெளியிட்ட) குமுதம் அதிபர்களுக்கும் என் நன்றியை இங்கு தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

நாவல் கலை தமிழுக்குப் புதிது. அதற்கு ஒரு மரபை ஏற்படுத்தித் தர முயன்றவர்கள் என்று இந்த ஐந்து ஆசிரியர்களையும் தமிழர்கள் போற்ற வேண்டும். இலக்கியத்திலே எந்த முயற்சிக்குமே மரபு என்பதுதான் ஆணி வேர். மரபு என்று ஒன்று ஏற்படாத காலத்தில் எழுதுபவர்கள் பலவித கஷ்டங்களுக் குள்ளாகிறார்கள். அந்தக் கஷ்டங்களைச் சமாளிப்பதற்கு முன்னோடிகளுக்குச் சாமர்த்தியம் மிகவும் வேண்டும். இன்று தமிழ்க் கலையுலகிலே நாவல் என்கிற விருக்ஷம் பரந்து விரிந்து ஓங்கி வளருகிறது என்றால் அதற்கு வழி செய்து தந்தவர்கள் வேதநாயகம் பிள்ளையும், ராஜமையரும், மாதவையாவும், நடேச சாஸ்திரியும், பொன்னுசாமிப் பிள்ளையும்தான். அவர்களுடைய முதல் நாவல் (சில சமயம் ஒரே நாவல்) பற்றி அறிந்து கொள்ள என் சிறு நூல் தமிழர்களுக்குப் பயன்படும் என்று எண்ணுகிறேன். ஒரு நூறு பேர்வழிகளாவது என் சிறு நூலால் தூண்டப்பட்டு அந்த முதல் நாவல்களைத் தேடிப் பிடித்துப் படிப்பார்களானால் அதுவே என் முயற்சிக்குப் பயன் என்று திருப்தியடைந்து விடுவேன்.

பின்னுரையில் ஓரளவுக்கு இந்த மரபைப் பின்பற்றி வந்தவர்களைப்பற்றி ஒரு குறிப்புச் சேர்த்திருக்கிறேன். தமிழில் நாவல் வளர்ச்சியை இங்கு தொடங்கி விரிவாக ஆராய, ஆராய்ந்து சில விமரிசன முடிவுகளைக் காண வேண்டிய அவசியம் இன்று இல்லையென்று சொல்ல முடியாது. இந்த அவசியமான வேலையை என்றாவது ஒருநாள் செய்து விட வேண்டும் என்கிற விருப்பமும் எனக்குண்டு.

திருவனந்தபுரம்
5—4—57

க. நா. சுப்ரமண்யம்

# முதல் ஐந்து தமிழ் நாவல்கள்

வேதநாயகம் பிள்ளையின்

## பிரதாப முதலியார் சரித்திரம்

### 1

அந்தக் காலத்தில் நவாபுகளிடத்தில் நல்ல வேலையாகக் கிடைக்க வேண்டுமானால் என்ன செய்ய வேண்டும் தெரியுமா? பிரதாப முதலியாரின் பாட்டனார் செய்ததைக் கேளுங்கள்.

"குதிரைமேல் அந்தப் பக்கமாகச் சவாரி வந்த ஒரு முஸ்லிம் பக்கிரி மூச்சுப் பேச்சற்றுத் தெருவில் தடாலென்று சாய்ந்துவிட்டான். அவன் காயம்பட்டு மயக்கமாகி விழுந்த இடத்திலேயே பிரேதம் போலக் கிடந்தான்.

"அப்போது அவ்விடத்திலிருந்தவர்கள், 'அவன் யாரோ பக்கிரி. அவனைத் தொட்டால் சாதிப்பிரஷ்டம் உண்டாகும் என்று சொல்லிக்கொண்டு விலகிப் போய் விட்டார்கள். என் பாட்டனார் மட்டும், 'அவன் யாராயிருந்தாலும் ஆபத்து வேளையில் உதவ வேண்டும்' என்று நினைத்து, அவனைத் தூக்கி மடிமேல் வைத்துக்கொண்டு,

அவனுடைய காயங்களைத் துடைத்துக் கட்டி அவனை
மூர்ச்சை தெளியும்படியான பக்குவங்களைச் செய்தார்.
அவன் மூர்ச்சை தெளிந்து எழுந்தவுடனே என்
பாட்டனாரைப் பார்த்து, 'நீர் செய்த உதவிக்கு ஏழைப்
பக்கிரியாகிய நான் என்ன பிரதி உபகாரம் செய்யப் போகி
றேன்?' என்று பலவாறாக ஸ்தோத்தரம் செய்தான்.
உடனே என் பாட்டனார், 'பிரதி உபகாரத்தை விரும்பி
இந்த உபகாரத்தை நான் செய்யவில்லை. ஆபத்துக் காலத்
தில் ஒருவருக்கு உதவுவது எவ்வளவோ பெரிய சுகிர்தம்.
அந்த சுகிர்தப் பலனே எனக்குப் போதும். இம்மையில்
நான் வேறு பிரதிப் பிரயோஜனத்தை அபேக்ஷிக்கவில்லை,'
என்றார். பக்கிரி என் பாட்டனாரைப் பார்த்து, 'இம்மையிலும்
உமக்கு அல்லா கிருபை செய்வார்' என, என் பாட்டனார்,
'நித்தியமான மறுமைப் பலனை நான் அபேக்ஷிக்கிறேனே
தவிர, இம்மைப் பலனை அபேக்ஷிக்கவில்லை' என்றார்.
உடனே அந்தப் பக்கிரி எழுந்து, 'நான் சொல்வதை நீ
ஆக்ஷேபிக்கிறாயா?' என்று கோபித்து, என் பாட்டனார்
கன்னத்தில் பளீரென்று அறைந்துவிட்டுக் குதிரையின்
மேல் ஒரே தாண்டாய்த் தாண்டி ஏறிக்கொண்டு போய்
விட்டான்."

அதற்குச் சில தினங்களுக்குப் பிறகு நவாபின் ஆட்
கள் வந்து பிரதாப முதலியார் பாட்டனார் ஏகாம்பர முதலி
யாரைப் பின் கட்டாகக் கட்டி இழுத்துக்கொண்டு போய்
நவாபு சமூகத்தில் சேர்த்தார்கள். "அப்பொழுது சிம்மா
தனத்தில் வீற்றிருந்த நவாபு என் பாட்டனாரைக் கண்ட
வுடனே எழுந்து ஓடிவந்து என் பாட்டனாரைத் தழுவிக்
கொண்டு, சொல்கிறார்: 'நான் பக்கிரி போல மாறு வேஷம்
போட்டுக்கொண்டு பல ஊர்களைச் சுற்றிப் பார்த்து வருகை
யில், சத்தியபுரியில் எனக்கு நேரிட்ட பிராணாபத்தைத்

தீர்த்து இரக்ஷித்தீரே; அந்த உபகாரத்திற்காகவும், உம்முடைய அபார யோக்கியதைக்காகவும், உம்மைத் திவான் உத்தியோகத்தில் நியமித்திருக்கிறோம். உமக்குச் சம்மதமா?' என்று கேட்டார். உடனே என் பாட்டனார் 'இம்மைப் பலன் வேண்டாம் என்று முன்னே நான் சொல்லிப் பட்டபாடு என் ஞாபகத்தில் இருக்கிறது; அதை நான் மறந்தாலும் என் கன்னம் மறவாது; ஆகையால் உங்கள் சித்தப்படி நடக்கக் காத்திருக்கிறேன்' என்றார். இதைக் கேட்டவுடனே நவாபு சிரித்துக் கொண்டு, 'நீர் ஆக்ஷேபிக்காமலிருக்கும் பொருட்டு உம்மைப் பலவந்தமாகக் கொண்டுவரும்படி ஆக்ஞாபித்தோம்' என்று சொல்லி, உடனே என் பாட்டனாரைத் திவான் உத்தியோகத்தில் நியமித்துச் சன்னதும் கொடுத்தார்."

இப்படித் தொடங்குகிறது வேதநாயகம் பிள்ளையின் 'பிரதாப முதலியார் சரித்திரம்.' பிரதாப முதலியாரின் சுயசரிதமாக, அவரே சொல்கிற மாதிரி, எழுதப்பட்டுள்ளது நாவல். தமிழில் இதுதான் முதல் நாவல். தன்னுடைய தமிழ் நூலுக்கு அந்தக் காலத்து வழக்கப்படி வேதநாயகம் பிள்ளை ஆங்கிலத்தில்தான் முன்னுரை எழுதியிருக்கிறார். தமிழில் வசனம் இல்லையே என்கிற குறையைப் போக்குவதற்காகவும், நீதி நூல் முடிவுகளைக் கதாபாத்திரங்கள் மூலம் அனுபவ சித்தாந்தமாக எழுத வேண்டும் என்றும் இதை எழுதியதாக ஆசிரியர் வேதநாயகம் பிள்ளை அந்த முன்னுரையில் குறிப்பிட்டிருக்கிறார். கதாநாயகன் தென்னிந்தியக் கனவான்; புத்திசாலி; ஹாஸ்ய உணர்ச்சி உள்ளவன்; தன் பிறப்பு வளர்ப்பு, பெற்றோர், கல்வி, கல்யாணம் பற்றியெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக ரஸமாகச் சொல்கிறான். சுயசரிதம் பேச யாருக்குத்தான் பிடிக்காது?

தன் கதையின் முடிவை எட்டக் கதாநாயகனுக்கு அவசரம் ஒன்றுமில்லை. கதாநாயகனே அவசரப்படாதபோது, வாசகர்கள் மட்டும் அவசரப்படலாமா? அவசரப்படாமல், நிதானமாகப் படிக்கவேண்டிய நாவல் இது. சம்பவங்கள் ஒன்றன்பின் ஒன்றாக வருகிற சுவாரசியமான கதைதான் இது என்றாலும் அவசரப்படாமல் கதையை நடத்திச் செல்லும் கலையை அற்புதமாகக் கையாண்டிருக்கிறார் ஆசிரியர்.

கதாநாயகனின் இளமைப் பருவத்திலிருந்து இன்னொரு காட்சி.

'பணக்காரப் பிள்ளைக்குக் கல்வி வேண்டுமா'? என்பது பற்றி விவாதம். அவனை தாயாருக்கு மட்டும் கல்விவேண்டும் என்று அபிப்பிராயம். "என்னை எட்டாவது வயது எட்டிப் பார்க்கிறவரையில் நான் சுத்த நிரக்ஷரகுக்ஷியாக இருந் தேன். என் மாதாவின் அலட்டைப் பொறுக்கமாட்டாமல், என் தந்தையார் என்னை ஒருநாள் தனியே அழைத்து, 'உன் தாயார் உன்னைப் பள்ளிக்கூடத்தில் வைக்கவேண்டும் என்கிறாளே, நீ என்ன சொல்லுகிறாய்?' என்று கேட்டார். உடனே நான் என் தந்தையை நோக்கி, 'ஐயா, நானும் படிக்கவேண்டுமா? எனக்கிருக்கிற சுயபுத்தி போதாதா? ஏழைகள் ஜீவனம் செய்து பிழைக்க வேண்டியதற்காக அவர்களுக்குக் கல்வி அவசியந்தான்; நான் படிக்க வேண்டிய அகத்தியமென்ன? ஏதாவது வாசிக்க வேண்டி யிருந்தால் வாசிக்கவும், எழுதவேண்டியிருந்தால் எழுதவும் நமக்குக் காரியஸ்தர்கள் இல்லையா? கணக்கர்களில்லையா?' என்றேன்." பிரதாப முதலியாரின் இந்தச் சாதுரியமான பதிலைக் கேட்டு அவர் தகப்பனார், பாட்டி, காரியஸ்தர்கள், கணக்கர்கள், பந்துக்கள், பணிவிடைக்காரர்கள் எல்லோரும் ஒவ்வொருவராய் வந்து அவரைப் பாராட்டினார்கள்.

இருந்தும் அவர் தாயாரின் கட்சிதான் ஜயித்தது. "'முகக் கண்ணுக்குப் பிரகாசம் எப்படி அவசியமோ, அப்படியே அகக் கண்ணுக்கு ஞானப் பிரகாசம் அவசியம்' என்று என் தாயார் கர்ணாமிருதமாகப் பிரசங்கித்தார்கள்." பிரதாப முதலியாருக்குக் கல்வி புகட்ட ஏற்பாடாயிற்று. எத்தனையோ உபாத்தியாயர்கள் வந்து போனார்கள். "இவ்வகையாக நான் பன்னிரண்டு உயிர் எழுத்தும் கற்றுக் கொள்வதற்கு முன் தள்ளுபடியான ஆசிரியர்களும் பன்னிரண்டு பேருக்கும் அதிகமாக இருக்கலாம்.

"இவ்வளவு ஆபத்துக்கும் தப்பி ஒரே ஒரு உபாத்தியாயர் மட்டும் நிலைத்திருந்தார். அவர் குடும்ப சகிதமாய் எங்கள் வீட்டில் இருந்துகொண்டு எனக்கும் அவருடைய பிள்ளை கனகசபை என்பவனுக்கும் பாடம் சொல்லிக் கொண்டு வந்தார். ஒருநாள் என் பாட்டியார் உபாத்தியாயரைப் பார்த்து 'நம்முடைய பிள்ளையாண்டான் படித்துத் தொண்டை வறண்டு போகிறதே! இனிமேல் உம்முடைய மகன் கனகசபை பாடம் படிக்கட்டும். அவன் படிக்கிறதைக் கேட்டு என் பேரன் கல்வி கற்றுக் கொள்ளட்டும். பிற்பாடு, என் பேராண்டிக்குப் பாடம் தெரியாவிட்டால், அவனுக்குப் பயம் உண்டாவதற்காகக் கனகசபையைப் பலமாக அடியும்' என்றார்கள். உபாத்தியாயரின் வயிற்றுக் கொடுமையினால், இந்த அநியாயமான நிபந்தனைக்கும் சம்மதித்தார்....நான் ஒரு அட்சரம் கற்றுக் கொள்வதற்குக் கனகசபை அநேகம் அடி படுவான். இப்படியானால், தமிழ் நெடுங்கணக்கு முழுவதும் எனக்குப் பாடம் ஆவதற்கு முன், அவன் எத்தனை அடி பட்டிருப்பானென்று புத்திமான்கள் கணக்கிட்டுத் தெரிந்துகொள்ளப் பிரார்த்திக்கிறேன். அவன் உயிருக்கும் உடலுக்கும் அபாயம் வரும்படியாக, அவனுக்கு அடி வாங்கிக்கொடுத்த

அட்சரங்களுக்கு உயிரெழுத்து, மெய்யெழுத்து, உயிர்மெய்யெழுத்து என்று பெயர் வந்தது கிரமமல்லவா?"

பிரதாப முதலியார் சரித்திரத்தை எழுதியபோது ஆசிரியர் வேதநாயகம் பிள்ளை அரசாங்க உத்தியோகம் பார்த்துவிட்டு ஓய்வு எடுத்துக்கொண்டிருந்தார். ஆங்கில இலக்கிய வளத்தைப் பார்த்து, 'ஐயோ! இப்படி இன்று ஏதுமில்லையே தமிழில்!' என்று பொறாமைப்பட்டார். அதற்காக அவர் வெறுங் கதை மட்டும் சொல்லிவிடுவதுடன் திருப்தியடைந்துவிட விரும்பவில்லை. பிரதாப முதலியாரின் தாயாரேபோல அவர் ஆங்காங்கே சிறு சிறு பிரசங்கங்களையும் நீதி நூல் முடிவுக் கதைகளையும் பழமொழிகளையும் சேர்த்திருக்கிறார். அவர் பெண்கள் முன்னேற்றத்தில் அளவற்ற ஆர்வம் கொண்டவர். 'பிரதாப முதலியார்'ரில் அவர் இரண்டு லட்சியப் பெண்களைச் சிருஷ்டித்திருக்கிறார். ஒன்று பிரதாப முதலியாரின் தாயார்—சுந்தர அண்ணி. இரண்டாவது அவருடைய மனைவி—ஞானம்பாள்.

பிரதாப முதலியாரின் பாட்டியார் சொல்கிறார்கள்: "விளையும் பயிர் முளையிலே தெரியும் என்பது போல ஞானம்பாள் இவ்வளவு சிறுபிராயத்தில் நடக்கிற கிரமத்தையும் ஒழுங்கையும் யோசிக்குமிடத்தில், அவள் அறிவிலும் நற்குணங்களிலும், உன் தாயாருக்குச் சமமானவள் என்று நினைக்கிறேன். உன் தாயாருக்குக் கல்யாணம் ஆவதற்கு முன் நடந்த ஒரு அதிசயத்தைத் தெரிவிக்கிறேன், கேள். உன் தாயார் கன்னிகையாயிருக்கும்போது, அவளுடைய குண அழகையும், ரூப லாவண்யத்தையும் கேள்வியுற்று, அவளை மணம் செய்வதற்கு நம்முடைய பந்துக்கள் அநேகர் விரும்பியும், முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டது போல, அவர்களுடைய எண்ணம் நிறைவேறாமற்

போயிற்று....” அவர்களில் ஒருவன் அவளைச் சிறையெடுத்துப் போனான். அந்த இக்கட்டிலிருந்து சாமர்த்தியமாகத் தப்பித்துக்கொண்டு வந்துவிட்டாள். இதைத் தெரிவித்து விட்டுப் பாட்டியார் மேலும் சொல்கிறார்கள்: “நான் வியாதியாயிருக்கும் காலங்களில், எனக்குப் பத்திய பாகங்கள் செய்து கொடுத்து, உன் தாயாரே எனக்குச் சகல பணிவிடைகளும் செய்து வருகிறாள். எனக்கு நூறு பத்திரிகள் இருந்தாலும், இந்த விருத்தாப்பிய காலத்தில் என் மருமகளைப்போல என்னை ஆதரிப்பார்களா? அவள் இல்லாவிட்டால், நான் செத்த இடம் புல் முளைத்துப் போயிருக்கும்.”

பிரதாப முதலியார் சொல்கிறார்: “மாமியார் மெச்சிய மருமகள் இல்லை என்கிற பழமொழிக்கு விரோதமாக என் தாயாருடைய சுகுணப் பிரபாவங்களை என் பாட்டியார் எடுத்துப் பிரஸ்தாபித்தவுடனே இப்படிப்பட்ட புண்ணியவதி 'வயிற்றில் பிறந்தோமே என்கிற சந்தோஷத்தினால் நான் புளகாங்கிதமாகி, ஆனந்தக் கண்ணீர் சொரிந்தேன்.”

மாமன் மகளாகிய ஞானாம்பாளுடன் சேர்ந்து படிக்கத் தொடங்கியது முதலே பிரதாபன் கல்வியில் கருத்துள்ளவனாகிவிடுகிறான். பிரதாபனுக்குக் கல்வி வரவேண்டுமே என்று அடிபட்ட கனகசபைகூட உண்மையில் உபாத்தியாயரின் மகன் அல்ல—அநாதையாய்க் கண்டெடுத்து அவர் வளர்க்கும் பையன் என்று தெரிகிறது. அநாதைப் பிள்ளைக்கு அன்னையும் பிதாவும் கிடைக்கிறார்கள். ஒரு கெட்ட சகோதரனின் சரித்திரத்தை ஓர் உப கதையாக விவரிக்கிறார் ஆசிரியர். பிரதாப முதலியாரின் பாட்டியார் கூடக் கனகசபைக்குச் செல்வாக்குள்ள பெற்றோர் கிடைத்தவுடன் முன் வந்து, “‘ஐயா, உங்கள் பிள்ளை என்னால் வெகுவாக அடிபட்டான். அதை நினைக்கும்

போது எனக்கு வருத்தமாயிருக்கிறது.' என்றார்கள்.... 'அவன் அடிபட்டது அவனுக்குப் பெரிய அனுகூலம். துன்பம் ஞானத்தின் பாடசாலை, துன்பப்படாதவன் ராஜாங்கத்துக்கு யோக்கியனாகமாட்டான்' என்று ஞான சபையின் தகப்பனார் கூறினார். கூடப் பிறந்தவர் அன்புள்ள சகோதரன் போல நெடுங்காலம் என்னுடன் கூடியிருந்து சகல சுகதுக்கங்களுக்கும் உடந்தையாக இருந்த கனகசபையைப் பிரிந்தது, எனக்குப் பெரிய மனோ துக்கமும் வியாசங்கமுமாய் இருந்தது. அவனுக்கு அதிபால்யத்தில் நேரிட்ட ஆபத்துக்களை நீக்கி அவனை அற்புதமாக வளர்ப்பித்த கடவுளது திருவருட் செயலை வியந்து ஸ்தோத்தரித்தேன்."

## 2

முன்னுரையில் ஆசிரியர் "நான் இந்த நாவலில் நற்குணங்களின் அழகையும் அமைதியையும், தீய குணங்களின் அழகின்மையையும் குரூபத்தையும் தீட்ட முயன்றிருக்கிறேன்" என்று சொல்கிறார். நல்லவர்களை முழுதும் நல்லவர்களாகவும், கெட்டவர்களை முழுவதும் கெட்டவர்களாகவும் தீட்டுவது, மனோதத்துவ சாஸ்திர வளர்ச்சியிலே திளைத்துவிட்ட இன்றைய நூலாசிரியர்களுக்கு உகக்காத காரியந்தான். ஆனால் மனோதத்துவ சாஸ்திரம் வளராத நாட்களில் எழுதிய பால்ஸாக்கும், டிக்கன்ஸும் கூட இந்தக் குற்றத்தைச் (இது குற்றமானால்!) செய்தவர்கள் என்று நாம் ஒப்புக்கொள்ள வேண்டும். ஐரோப்பிய நாவல் இலக்கியத்தின் ஆரம்பம் என்று சொல்லவேண்டிய டான் க்விஜோட்டிலும், ஆங்கில இலக்கியத்தின் முக்கிய ஆதி நாவலான டாம் ஜோன்ஸிலும் காணப்படுகிற குற்றம் தான் இது. ஒரு கோணத்திலிருந்து பார்க்கும்போது இந்தக்

குற்றமே நமக்கு உகந்ததாக இருப்பதாகவும் தோன்றுகிறது. மனிதர்கள் இப்படி இல்லையே என்பதற்காக இப்படி இருந்தால் தேவலையே என்று எண்ணுவது தவறு என்ன? வாழ்க்கையிலே இப்படி இருந்துவிட்டால் சௌகரியம்தான். இலக்கியத்திலாவது இந்தச் சௌகரியத்தை ஏற்படுத்திக் கொள்ளலாமே என்று எண்ணுவதில் தவறு எதுவும் இல்லை.

சுந்தர அண்ணியும் ஞானாம்பாளும் போன்றவர்கள் நம்மிடையே இல்லை,—உண்மைதான், அதற்காக அவர்களைப் போன்றவர்கள் இருக்கக் கூடாதா என்று ஏங்குவதில் என்ன தவறு? அப்படி நாம் ஏங்கும்படியாக அந்தப் பாத்திரங்களைச் சிருஷ்டித்திருப்பது வேதநாயகம் பிள்ளையின் பெருமை என்றே சொல்லலாம்.

இந்த நாவலிலே பிரிந்தவர் கூடுதலும், ஏழை திடுதிடுப்பென்று பணக்காரராகி விடுவதும் சர்வ சாதாரணமாக நிகழ்கிற காரியங்கள். வாழ்க்கையிலும் அவை சில சமயம் நடப்பதுண்டு என்று நாம் மனத்தைத் தேற்றிக் கொள்ளலாம். இயற்கைக்கு விரோதமாகத் தோன்றும்படி கதையை நடத்திச் செல்ல வேதநாயகம் பிள்ளை முயலவில்லை. “சரித்திர ரீதியாக உண்மையென்று சொல்ல முடியாத கதைகளில் அதிசயோக்தமான, இயற்கைக்கு ஒவ்வாதது என்று எண்ணுகிற விஷயங்களை ஏன் சொல்லக் கூடாது என்று எனக்குத் தெரியவில்லை'' என்று ஆங்கிலப் புலவர் டாக்டர் ஜான்ஸன் சொன்னதைத் தன் எழுத்துக்கு ஆதாரமாக முன்னுரையில் எடுத்துக் காட்டுகிறார் அவர். ‘‘நடைமுறையில் இல்லாத குணாதிசயத்தையும் குணமில்லாமையையும் ஒரு நூலில் எடுத்துக் கையாளுவது தவறில்லை'' என்கிற சித்தாந்தத்துடன் எழுதிய நூல் பிரதாப முதலியார் சரித்திரம் என்பதை ஞாபகம் வைத்துக் கொண்டு கதையை மேலே தொடரலாம்.

தக்க வயது வந்தவுடன் ஞானம்பாளைப் பிரதாப முதலியாருக்கு மணம் பேச ஏற்பாடுகள் நடந்தன. பிரதாப முதலியார் குடும்பம் புதுப் பணக்காரர்கள் என்று ஞானம்பாள் குடும்பத்தார் ஏச, மணப் பேச்சு முறிவடைந்தது, "அன்று முதல் சம்பந்தி முதலியாருக்கும் எங்களுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லாமல் போய் விட்டது. அவர்கள் வீட்டிற்கு நாங்கள் போகிறதுமில்லை. அவர்களுடைய சிநேகிதர்கள் எங்களுக்கு விரோதிகள். அவர்களுடைய பகைவர்கள் எங்களுக்கு இஷ்டர்கள். அவர்களுடைய வேலைக்காரர்களுக்கும் எங்களுடைய வேலைக்காரர்களுக்கும் பகை. அவர்களுடைய ஆடுமாடுகளுக்கும் எங்களுடைய ஆடுமாடுகளுக்கும் பகை." ஆண்களுக்கிடையே எழுந்த சண்டையைப் பெண்களால் தீர்த்துவைக்க முடியவில்லை. ஆனால் கதாநாயகன் பிரதாபன், ஞானம்பாளை இரகசியத்தில் அழைத்துச் சென்று விவாகம் செய்துகொண்டு விடுவது என்று எண்ணி அவளுக்குக் கடிதம் எழுதினான். ஆனால் காந்தர்வ விவாகத்தைக் கண்டித்து ஞானம்பாள் ஒரு கட்டுரையையே கடிதமாக எழுதித் தன் அத்தானுக்கு அனுப்பி விட்டாள்

ஞானம்பாளுக்கு வேறு இடத்தில் மணம் செய்விக்க ஏற்பாடாயிற்று. பிரதாப முதலியாருக்கும் வேறு இடத்தில் பெண் பார்த்தார்கள். இரண்டு கல்யாணங்களும் ஒரே சமயத்தில் ஒரே ஊரில் நடக்க இருந்தன. தெய்வாதீனமாக ஞானம்பாள் கோஷ்டியாரோ, பிரதாப முதலியார் கோஷ்டியாரோ அன்று அங்கு போய்ச் சேர முடியாமல் போய்விட்டது. விஷயத்தை அறியாமலே ஞானம்பாளுக்கென்று வந்த மணமகனுக்கும் பிரதாப முதலியாருக்கென்று வந்த மணமகளுக்கும் பெரியவர்கள் கலியாணத்தை

முடித்து வைத்துவிட்டார்கள். நடக்க முடியாத சம்பவம் என்றுதான் சொல்லத் தோன்றுகிறது. இல்லையா? ஆனால் அப்படி நடந்திராவிட்டால் ஞானம்பாளைப் போன்ற குணவதியைத் தேடிப் பிரதாப முதலியார் ஒரு ஜன்மம் பூராவும் காத்திருக்க வேண்டியதுதானே!

இதற்குப் பிறகு ஞானம்பாளை ஒருவன் சிறைப்பிடிக்கிறான். அந்த நிலையில் பிரதாப முதலியார் அவளைக் காப்பாற்றிக் கொண்டுவந்து அவள் பெற்றோரிடம் ஒப்படைக்கிறார். இதில் உப கதையாக ஓர் அரசாங்க உத்தியோகஸ்தனின் தீய அழுலும் அவன் அடைந்த தண்டனையும் சொல்லப்படுகிறது. இன்னொரு உப கதையாக, மாமி—நாத்திகளின் கொடுமையும், கணவனைப் பிரிந்த பெண் மீண்டும் கணவனை அடைவதும் விவரிக்கப்படுகிறது. அதற்குப் பின் நடந்ததைப் பிரதாப முதலியாரின் வார்த்தைகளிலேயே சொல்லலாம்: "எனக்கும் ஞானம்பாளுக்கும் அதிசீக்கிரத்தில் விவாகம் முடிக்க வேண்டுமென்று சம்பந்தி முதலியார் அவசரப்பட்டார். அவருடைய துரிதத்தைப் பார்த்தால், அன்றைய தினமே கலியாணம் முடிந்தாலும் அவருக்குச் சந்தோஷமாயிருக்குமென்று தோன்றிற்று. என்னுடைய மனோபீஷ்டமும் அப்படியே இருந்தது. ஆனால் என் தாய் தந்தைமார்கள், தூரத்திலிருக்கிற பந்து ஜனங்களும் கனகசபை முதலானவர்களும் கலியாணத்துக்கு வரும்படியான சாவகாசத்தை யோசித்து முகூர்த்தம் நியமித்ததினால் கலியாணம் இருபது நாள் பிந்திப் போய் விட்டது. அந்த இருபது நாளும் இருபது மாதங்களைப் போல இருந்தன. அந்தக் காலத்தைத் தொலைக்க என்னாலே கூடியவரையில் பிரயாசைப்பட்டும் தொலையவில்லை... கடைசியாய், அந்தக் காலமும் முடிந்தது. ஞானம்பாளுக்கும் எனக்கும் கலியாணமும் முடிந்தது. அந்தக் கலியாண

மகோற்சவ வைபவத்தைப் பிறர் சொல்ல வேண்டுமே அல்லாது நான் சொல்லிக்கொள்வது தற்புகழ்ச்சியாய் முடியும். அன்றியும், ஞானாம்பாளை நான் மாலை சூட்டப் பெற்ற பாக்கியத்தைப் பார்க்கிலும், மற்றக் கலியாண சம்பவங்கள் விசேஷமல்ல."

சுந்தரத்தண்ணி, ஞானாம்பாள் என்று இரண்டு லட்சியப் பெண்கள் போதாது என்று இந்தச் சந்தர்ப்பத்தில் ஆசிரியருக்குத் தோன்றியது போலும். அதற்காகக் கனகசபைக்கு மனைவியாகப் போகிறவள் என்று சொல்லி முனிரத்தினம் என்ற ஒரு பெண்ணை அறிமுகம் செய்து வைக்கிறார். "அந்தப் பெண்ணினுடைய சரித்திரம் கனகசபை சரித்திரம் போல, ஆச்சரியப்படத் தக்கதாயிருக்கின்றது" என்று ஆரம்பித்துக் கதை சொல்லுகிறார் தேவராஜப் பிள்ளை. "திருடன் வந்து அவளைத் தூக்கிக் கொண்டு போனான். உறவினர்கள் துரத்தவே திருடன் சமீபத்திலிருந்த ஐயனார் கோவிலுக்குள்ளே நுழைந்து பிள்ளையை விக்கிரகத்தின் பாதத்தில் வைத்துவிட்டு, அந்த விக்கிரகத்தின் பின்னாலே மறைந்துகொண்டான். ஐயனார் பேசுவது போலத் தன் குரலை வேறுபடுத்திக்கொண்டு சொல்லுகிறான்: 'ஓஹோ! துஷ்டர்களே! இந்தப் பிள்ளை மேல் நமக்குக் கிருபை உண்டாகி, அதை ஆசீர்வதித்துச் சகல வரப்பிரசாதங்களையும் கொடுத்து அனுப்பலாமென்று யோசித்து, நான் அந்தப் பிள்ளையைக் கொண்டு வந்திருக்க, அந்த உபகாரத்தை நீங்கள் எள்ளளவும் யோசிக்காமலும், தேகசுத்தி இருதயசுத்தி இல்லாமலும், என்னுடைய ஆலயத்தில் வந்து பிரவேசிக்கிறீர்களே! ஒரு நிமிஷத்தில் உங்கள் குடலைப் பிடுங்கி மாலையாய்ப் போட்டுக் கொள்ளுவேன். ஆனால், அந்தப் பிள்ளைமேல் இருக்கிற கருணையால் உங்கள் குற்றத்தை க்ஷமிக்கிறேன். அந்தப் பிள்ளையை

இந்த இராத்திரி மட்டும் விட்டுவிட்டுப் போவீர்களானால், அதற்குச் சகல அனுக்கிரஹமும் செய்து வைத்திருக்கிறேன். நீங்கள் பின்னொரு காலத்தில் வந்து, பிள்ளையை எடுத்துக்கொண்டு போகலாம். இதற்கு நீங்கள் சம்மதிக்கா விட்டால், அந்தப் பிள்ளையையும் கொன்று, உங்களையும் குல நாசம் செய்வேன்' என்றான்" துரத்திக்கொண்டு வந்தவர்கள் ஐயனார் பேச்சுக்கு மறுபேச்சுச் சொல்வார்களா? குழந்தையை அப்படியே விட்டுவிட்டுப் போனார்கள். இது நம்பக்கூடிய சம்பவம்தான். தெய்வத்தின் பெயரால்தான் நாம் எப்பொழுதும் எதுவும் செய்யத் தயாராக இருக்கிறோமே! மறுநாள் காலையில் பூசாரி வந்ததும், "இராத்திரி ஐயனார் திருவாய் மலர்ந்தருளியதைச் சொன்னார்கள். இதைக் கேட்டவுடனே, 'கோயிற் பூனை தேவர்க்கு அஞ்சாது' என்பதுபோல் அந்தப் பூசாரிக்கு அடக்கக்கூடாத பெருஞ் சிரிப்பு வந்துவிட்டது", ஐயனார் அனுக்கிரகத்துக்குப் பாத்திரமான அந்தக் குழந்தைதான் ஞானரத்தினம். கனகசபையின் முறைமைப் பெண். ஆனால் கலியாணம் நடக்குமுன் கனகசபையின் பிறப்பு வளர்ப்பு எல்லாவற்றையும் துரைத்தனத்தாருக்கு ருஜூப்பித்தாக வேண்டும். "நான் சந்ததி இல்லாமல் இறந்து போனால், என் பாளையப் பட்டைக் கவர்ன்மெண்டார் கட்டிக்கொள்வார்களென்று பயந்து, ஒரு பிள்ளை காணாமற் போயிருந்து அகப்பட்டது போல நான் மாறுபாடு பண்ணுவதாகவும், அந்தச் சிவெஸ்தார் கலெக்டருக்குப் போதித்து, என்னுடைய பாளையப் பட்டை ஜப்தியில் வைக்கப் பிரயாசைப்படுகிறான். இதற்கெல்லாம் நான் எள்ளளவும் பயப்படவில்லை. நியாயமும் சத்தியமும் நம்முடைய பக்கத்திலிருக்கும்போது நமக்கு யார் என்ன செய்யக்கூடும்?" என்று முடித்தார் கனகசபையின் தகப்பனார்.

ஞானம்பாளும் பிரதாப முதலியாரும் இல்லறம் நடத்துகிறார்கள். "குண அழகு அழகேயன்றி முக அழகு அழகல்ல" என்று பல பெண்களின் சரித்திரத்தை ஞானம்பாள் வாயிலாகச் சொல்லி ஆசிரியர் நிரூபிக்கிறார்.

பின்னர், "நான் ஞானம்பாளைப் பார்த்து, 'உனக்கு ஒரு துஷ்டப் புருஷன் வந்து வாய்த்தால், நீ என்ன செய்வாய்?' என்று கேட்க" அவள் ஒரு கதையைச் சொல்லித் துஷ்டப் புருஷனைத் திருத்த வழி சொன்னாள்.

"பிறகு ஞானம்பாள் என்னைப் பார்த்து, 'உங்களுக்கு ஒரு கெட்ட பெண்சாதி வாய்த்தால், நீங்கள் என்ன செய்வீர்கள்?' என்று கேட்டாள். 'அவளை என்னாலே கூடிய வரையில் சாந்தமாகவும் நயமாகவும் பேசித் திருத்தப் பிரயாசைப்படுவேன். அவள் திருந்தாமல் முரட்டுத்தனம் செய்வாளானால், அரபி தேசத்து ஆயிரம் ராத்திரிக் கதைகளில் ஒன்றில் சொல்லுகிற பிரகாரம் செய்வேன்' என்றேன். அந்தக் கதையின் சுருக்கத்தைச் சொல்ல வேண்டும் என்று ஞானம்பாள் கேட்க" பிரதாப முதலியார் மிருகங்கள் பாஷை அறிந்த கணவன் ஒரு கோழியின் கூற்றைக் கேட்டுத் தன் மனைவியை உதைத்துத் திருத்தின கதையைக் கூறினார்.

இதற்குள் ஞானம்பாளின் தகப்பனாருக்கும் பிரதாப முதலியாரின் தகப்பனாருக்கும் மறுபடியும் தர்க்கம் வந்துவிட்டது. இன்னும் பிறக்காத குழந்தையை ஸ்வீகாரம் கேட்டார் ஞானம்பாளின் தகப்பனார். "'எனக்குப் பௌத்திரன் வேண்டாமா? உமக்கெப்படி ஸ்வீகாரம் கொடுப்பேன்?' என்றார் என் தந்தை. இதைக் கேட்டவுடனே சம்பந்தி முதலியாருக்கு ஆக்கிரோசம் உண்டாகி அவர் வீட்டுக்குப் போய் ஞானம்பாளைக் கூப்பிட்டு, 'உனக்கு நான் வேண்டுமா? புருஷன் வேண்டுமா?' என்று கேட்க,

அவள் 'இருவரும்தான் வேண்டும்' என்றாளாம். 'இருவரி லும் யார் விசேஷம்?' என்று அவர் மறுபடியும் கேட்க, நேரே உத்தரவு சொன்னால் தகப்பனாருக்குக் கோபம் வரும் என்று நினைத்து, 'என் தாயாருக்குத் தன் தகப்பனாரைப் பார்க்கிலும், நீங்கள் விசேஷமல்லவா?' என்று விசேஷமாக வும், மறைபொருளாகவும் மறுமொழி சொன்னாள்....ஞானம் பாளை அவர் வாயில் வந்தபடி தூஷித்தார். தூஷணையான வார்த்தைகளை அவள் ஒருநாளும் கேளாதவளானபடியால் அவளுக்கு உடனே நடுக்கமும், சுரமும் கண்டு கர்ப்பத் துக்கு அபாயம் வந்துவிட்டது". இதற்குள் இதுபற்றியே பிரதாப முதலியாருக்கும் அவர் தகப்பனாருக்கும் மனஸ் தாபம் வரவே, வீட்டை விட்டு வெளியேறினார் அவர். ஞானம்பாளும் வந்து சேர்ந்துகொண்டாள். வழிப் பயணத் திலே ஒரு புதுக்கதை சொல்லப்படுகிறது. அப்பால் வழிப்போக்கர்கள் புலிவேஷக்காரர்களைப் பார்த்துப் புலி யென்றே பயந்து ஓடுகிறார்கள். கனகசபைப் பிள்ளையின் தகப்பனார் கூறுகிறார்; "தாய் தகப்பன்மார்களுடைய சண்டைகளெல்லாம் பிள்ளைகள்மேல் இருக்கிற பக்ஷத்தி னால் விளைகின்றனவே அல்லாமல் மற்றப்படி அல்ல."

பிரதாப முதலியாரும், ஞானம்பாளும் வீடு திரும்பினர். கனகசபையின் கலியாணம் இனிது நிறைவேறியது. அந்தக் கலியாணத்தோடு நடந்த நாலு கலியாணங்களில் ஒன்றில் தாலி கட்ட மறந்து போய்விட்டது விவரிக்கப்படுகிறது.

## 3

**பி**ரதாப முதலியார் சரித்திரம் என்கிற இந்த நாவலைத் தங்கள் முதல் நாவலாகப் படைத்த தமிழர்களைப் பாக்கிய சாலிகள் என்றுதான் சொல்ல வேண்டும். இந்த நாவலை முதல் தடவையாகப் படிக்கும்போதுதான் அது ஒரு

நூதன அனுபவமாக அமைகிறது என்று சொல்ல முடியாது. ஒவ்வொரு தடவை படிக்கும்போதும் அது ஒரு நூதனமான அனுபவமாகவே படுகிறது. படிக்குந்தோறும் படிக்குந்தோறும் நவநவமான ருசிகளைத் தரக்கூடிய இந்த நாவலில் விமரிசகன் எவ்வளவு குற்றங் குறைகள் கண்டால் தான் என்ன? வாசகன் எப்போதும் விரும்பிப் படிப்பான்.

நாவலாக இதில் உருவம் கட்டுக்கு அடங்கவில்லை. தமிழில் நாவலுக்கு என்று ஒரு மரபு ஏற்படாத காலத்தில் எழுதப்பட்ட இந்த நாவலில் உருவம் வழிந்தோடுகிறது என்பது ஒரு குறையாகாது. அளந்து பார்த்து வெட்டி நீட்டி இப்படித்தான் ஓர் உருவம் சமைக்க வேண்டும் என்று நாம் பிரம்ம தேவனுக்குக் கட்டளை பிறப்பிக்க முடியுமா என்ன? அதே போல வேதநாயகம் பிள்ளை எழுதி நமக்களித்திருக்கும் இந்நாவலில் வளர்த்தல், தொக்கி நிற்றல், அதிகப்பிரசங்கித்தனம் எல்லாம் இருக்கின்றன என்று சொல்லிப் பயனில்லை. அவற்றுடன் சேர்த்துத் தான் நமக்கு இதை ஆக்கித் தந்திருக்கிறார் அவர். நம் நினைப்பில் நாம் ஏற்படுத்திக்கொண்ட நாவல் என்கிற கஜக்கோல் சரியோ, தப்போ—யார் சொல்ல முடியும்? சுவாரசியமான கதை—பலவிதமான சுழிப்புகளுடனும் நுங்கு நுரைகளுடனும் புது வெள்ளம்போல ஓடுகிறது இது. திளைத்து மூழ்கிக் களிக்க அறிந்தவர்கள் அதிருஷ்ட சாலிகள்தான். கரை புரண்டு ஓடுகிறதே, இல்லை, கரைகள் இடிந்துவிட்டனவே என்றும் முறையிடுவது இலக்கிய வளத்துக்கு அடிகோலுவதாகாது.

"என்னுடைய ஹிந்து வாசகர்களுக்கு ராஜாக்களையும் ராணிகளையும் பற்றிய செய்திகளைக் கேட்கப் பிடிக்குமே என்றுதான் ஞானம்பாளை மாறு வேஷத்தில் அரசனாக்கிப் பார்த்தேன்" என்று முகவுரையில் எழுதுகிறார் வேத

நாயகம் பிள்ளை. வேட்டைக்குப் போன புருஷனிட மிருந்து பிரிந்துபோன ஞானம்பாளை ஒரு யானை மாலையிட்டுத் தூக்கிப் போய்விடுகிறது. "குடியரசென்னும் கொடிய அரசுபற்றி" அந்தக் காலத்துக்கும் அவர் அறிவுக்கும் எட்டிய வரையில் விவரிக்கிறார் ஆசிரியர். ஓர் அரசியல் பிரசங்கத்தையே புகுத்திவிடுகிறார். "ஜனங்களுடைய சௌக்கியத்துக்காக இராஜாங்கம் ஏற்பட்டிருக்கிறதே தவிர, தன்னுடைய சௌக்கியத்துக்காக ஏற்பட்டிருக்க வில்லை என்பதை, அரசன் எப்போதும் தன்னுடைய கருத்தில் வைக்க வேண்டும்....ஒரு அன்புள்ள தகப்பன், தன் பிள்ளைகளுடைய நன்மைகளை எப்போதும் தேட வேண்டும்....கடவுளைப்போல, அரசனுக்குச் சர்வலோக சஞ்சாரமும் சர்வ சக்தியும் இல்லாததால், உத்தியோகஸ்தர்கள் மூலமாகவே அரசன் அநேக காரியங்களை நடத்த வேண்டியதாயிருக்கும். அந்த உத்தியோஸ்தர்கள் இராஜப் பிரதிநிதிகளாகையால், அவர்கள் சர்வோத்தமர்களாய் இருக்கவேண்டும்....அரசன் யோக்கியர்களையே நாடுகிறான் என்று யாவருக்கும் தெரிந்தால், உலகத்தில் யோக்கியதை அதிகரிக்கவும், அயோக்கியதை வலசை வாங்கிப் போகவும் இடமாகுமல்லவா? சில இராஜாங்கத்தார் யோக்கியதையைக் குறித்து யாதொரு பரீக்ஷையும் செய்யாமல் கல்விப் பரீக்ஷை மட்டும் செய்துகொண்டு, அதில் யார் தேர்ந்து வருகிறார்களோ, அவர்களுக்கே எந்த உத்தியோகங்களையும் கொடுக்கிறார்கள்........இங்கிலீஷ் துரைத்தனத்தாரால் நியமிக்கப்பட்டிருக்கிற பாடசாலைகளில், ஈசுவர நிச்சயம், சன்மார்க்கம் முதலிய ஆத்மார்த்தமான விஷயங்கள் கற்பிக்கப்படாமல், லௌகிக சம்பந்தமான சில காரியங்கள் மட்டும் கற்பிக்கப்படுகிறபடியால், அந்தப் பாடசாலைகளில் கல்வி கற்கிற பிள்ளைகள், உலகாயதர்களாயும், நாஸ்திகர்

களையும் பரிணமிக்கிறார்கள். அவர்களுக்கு உத்தியோக
மான உடனே பணமே தெய்வமென்று நினைத்து, அதைச்
சம்பாதிக்கிறதற்காக சகல அக்கிரமங்களையும் செய்கிறார்
கள்." இதைத் தொடர்ந்து லஞ்சம் வாங்குகிற உத்தியோ
கஸ்தர்களைப்பற்றி ஆத்திரம் தீர இரண்டு பக்கங்கள் எழுதி
யிருக்கிறார் வேதநாயகம் பிள்ளை, ஞானாம்பாள் என்கிற
ஆண் வேஷ அரசன் வாயிலாக. "....தேன் மழை பொழி
வது போல ஞானாம்பாள் பிரசங்கித்தாள். நான் அளவற்ற
ஆக்லாதமடைந்து அவளைப் பார்த்து 'நீ இவ்வளவு
கையிருப்பு வைத்துக்கொண்டு அரசாளத் தெரியாதென்று
சொன்னாயே! இப்போது உலகத்தில் அரசு செய்கிறவர்
களுக்கு, உனக்குத் தெரிகிற காரியங்களில், நூற்றில் ஒரு
பங்குகூடத் தெரியுமா?' என்றேன். அவள் என்னைப்
பார்த்து, 'வார்த்தைக்குத் தரித்திரமுண்டா? வாய்ப் பந்தல்
போட யாராலே கூடாது?....பேசினபடி நடப்பதல்லவோ
கஷ்டம்?' என்றாள்."

ஆண் வேஷத்திலே ஞானாம்பாள் அரசாண்ட நாட்
டிலே பல சீர்திருத்தங்களைச் செய்தாள் அவள். உத்தி
யோகஸ்தர்கள், நிர்வாகஸ்தர்கள் இவர்களுடைய அழிம்பை
அடக்கிக் கட்டுப்படுத்தினாள். வியாதிகள் வருமுன்னமே
அணை போட்டுத் தடுக்க முனைந்தாள். ராஜபக்தியின் அவசி
யத்தை வலியுறுத்தினாள். அரசியற் செலவுகளைக் குறைத்
தாள். நியாயமல்லாதது நடவாதபடி அறவே ஒழிக்க
முயன்றாள். அஞ்சாமல் நியாயம் வழங்குவதை நிலைநிறுத்தி
னாள். முனிசிப்பான தன் அனுபவத்தை யெல்லாம் வைத்
துச் சில முடிவுகளை வேதநாயகம் பிள்ளை கதைப் போக்கு
தடைப்படாமல் கூறியிருக்கிறார். சுதேச பாஷாபிவிருத்
தியைப் பற்றி ஓர் அத்தியாயமே எழுதிவிட்டார்.
"இங்கிலீஷ் வார்த்தைகளுக்குச் சரியான பிரதிபதங்கள்

தமிழில் இல்லை என்று சொல்வது, தெரியாமையே அல்லாமல் உண்மையல்ல. தமிழ் நூற்களைத் தக்கபடி ஆராய்ந்தால், பிரதிபதங்கள் அகப்படுவது பிரயாசமா? அப்படித்தான் இரண்டொரு சங்கேத வார்த்தைகளுக்குத் தமிழிலாவது சம்ஸ்கிருதத்திலாவது பிரதிபதங்கள் அகப்படாத பக்ஷத்தில் அந்த வார்த்தைகளை மட்டும் இங்கிலீஷிலே பிரயோகித்தால் அவர்களை யார் கோபிக்கப் போகிறார்கள்?" மொழி வளர்ச்சிபற்றி இப்படி வேதநாயகம் பிள்ளை எழுதியது 1879-ல் என்று ஞாபகம் வைத்துக்கொண்டு பார்க்கும்போது நமக்கே ஆச்சரியமாக இருக்கிறது. "இந்தத் தேசத்தார் சொந்தப் பாஷைகளையாவது, அல்லது எந்தப் பாஷைகளையாவது படிக்கலாமென்று இங்கிலீஷ் துரைத்தனத்தார் உத்தரவு செய்திருப்பதும், அந்த உத்தரவைச் சுதேச கனவான்கள் ஆக்ஷேபிக்காமல் சும்மா இருப்பதும் நியாயமா?.....சமஸ்கிருதமும் லத்தீனும் அதிக சிறப்பும் அழகும் அலங்காரமும் பொருந்திய பாஷைகள் என்பதற்குச் சந்தேகமில்லை. அவகாசமுள்ளவர்கள் சொந்தப் பாஷைகளோடுகூட அந்தப் பாஷைகளையும் படிப்பது அதிக விசேஷம்தான். ஆனால், சொந்தப் பாஷைகளை நன்றாகப் படிக்காமல் அந்த அந்நிய பாஷைகளிலே காலமெல்லாம் போக்குவது அகாரியம் என்றுதான் ஆக்ஷேபிக்கிறோம்....மாதா வயிறெரிய மகேசுவர பூஜை செய்வது போல இருக்கிறது இது....தமிழில் வசன காவியங்கள் இல்லாமலிருப்பது பெருங் குறை. ஐரோப்பிய பாஷைகளில் வசன காவியங்கள் இல்லாமலிருக்குமானால், அந்தத் தேசங்கள் நாகரீகமும் நற்பாங்கும் அடைந்திருக்கக் கூடுமா? அப்படியே நம்முடைய சுய பாஷைகளில் வசன காவியங்கள் இல்லாமலிருக்கிற வரையில், இந்தத் தேசம் சரியான சீர்திருத்தம் அடையாதென்பது நிச்சயம்........

இங்கிலீஷ், பிரெஞ்சு முதலிய ராஜ பாஷைகளைப் படிக்கிறவர்கள் தேச பாஷைகளைத் தீர்க்கமாக உணர்ந்து, இந்தத் தேசத்தைச் சூழ்ந்திருக்கிற அறியாமை என்னும் அந்தகாரம் நீங்கும்படி வசன காவியங்களென்னும் ஞான தீபங்களை ஏற்றுவார்களென நம்புகிறோம். தமிழ் படிக்காதவர்கள் தமிழ் நாட்டில் வசிக்க யோக்கியர்கள் அல்ல. அவர்கள் எந்த ஊர்ப் பாஷைகளைப் படிக்கிறார்களோ, அந்த ஊரே அவர்களுக்குத் தகுந்த இடமாகையால், சுயபாஷையைப் படிக்காமல் இங்கிலீஷ் மட்டும் படிக்கிறவர்களை இங்கிலீஷ் தேசத்துக்கு அனுப்பிவிடுவோம். பிரெஞ்சு மட்டும் படிப்பவர்களைப் பாரீஸ் பட்டணத்துக்கு அனுப்பிவிடுவோம். இலத்தீனுக்கும் சமஸ்கிருதத்துக்கும் சொந்த ஊர் இல்லாதபடியால், அந்தப் பாஷைகளைப் படிப்பவர்களை அநாமகரணத் தீவுகளுக்கு அனுப்புவோம்.”

இவ்வளவும் தான் செய்த பிரசங்கம் என்று யாராவது எண்ணிவிடப் போகிறார்களே என்று, கடைசியில் “என்றாள் ஞானாம்பாள்” என்று அத்தியாய இறுதியில் சேர்த்திருக்கிறார் ஆசிரியர்.

ராஜாங்கம் இப்படியாக நடந்துவரும் நாளையிலே பழைய அரசனின் குமாரி ஆனந்தவல்லி இன்னமும் ஆண் வேஷத்திலிருந்த ஞானாம்பாளிடம் காதல் கொண்டுவிட்டாள். இந்தச் சிக்கல் ஒன்று வருமுன்னமே ஞானாம்பாளுக்கு அரச பதவி வெறுத்துவிட்டது. “‘நம்முடைய ஊரில் நமக்கென்ன பாக்கியம் குறைவாயிருக்கிறது? இந்த ஊர்க் குடிகளுடைய சௌக்கியத்துக்காக நாம் இந்த அரசாட்சியை ஏற்றுக்கொண்டதேயல்லாது, நமக்கு ஏதேனும் இலாபம் உண்டா? குடிகளுக்கு வேண்டிய சௌக்கியங்களையும், சட்டதிட்டங்களையும் நாம் ஏற்படுத்திவிட்டபடியால், இனிமேல் இந்த ஊரை ஆளுகிறவர்களுக்கு

அதிகப் பிரயாசை இராது' என்றாள் ஞானம்பாள்.'' அரசை ஆனந்தவல்லியிடம் ஒப்படைத்துவிட்டு ஞானம் பாளும் பிரதாப முதலியாரும் வெளியேறத் தயாரானார்கள். இதற்குள் மந்திரி பிரதானிகள் கூடித் தங்கள் அரசன் ஆனந்தவல்லியை மணந்துகொள்ளவே வேண்டும் என்று வற்புறுத்தத் தொடங்கியும் விட்டார்கள். திருமணத்துக்கு நாள்கூடக் குறிப்பிட்டுவிட்டார்கள்.

இருந்தால் இனிச் சங்கடம்தான் என்று இருவரும் வெளியேறிவிட்டார்கள் யாருடனும் சொல்லிக் கொள்ளா மல். பின்னர், ஞானம்பாள் ஆனந்தவல்லிக்கு உண்மை எல்லாவற்றையும் வெளியிட்டு ஒரு லிகிதம் எழுதியனுப்பி னாள். ஊர் திரும்புகிற வழியிலே ஞானம்பாளுக்கு அம்மை கண்டது. அவள் இறந்துவிட்டதாக எண்ணிய பிரதாப முதலியாருக்கு, பின்னர்தான் அவள் உயிருடன் இருந்தது தெரிந்தது. "துக்கப்படுகிறவர்கள் முடிவில் சுகம் அடைவார்கள்" என்று தன் துயரத்தை முடித்துக்கொள் கிறார் பிரதாப முதலியார்.

"பல நாளாயின. பின், ஞானம்பாள் ஆண் வேஷம் பூண்டு அரசாண்ட பாவனையாக இப்போது காட்ட வேண்டுமென்று ஞானம்பாளை என் பாட்டியார் முதலான வர்கள் வேண்டினார்கள். ஞானம்பாளுக்கு எவ்வளவு இஷ்டமில்லாவிடினும், பல பெயர்களுடைய நிர்ப்பந்தத்தி னால் ஒரு நாள் ஞானம்பாள் அரசனைப் போல வேஷம் பூண்டு கொண்டாள். சாக்ஷாத் இராஜ வடிவாகவே தோன் றின ஞானம்பாளைப் பார்த்து எல்லாரும் அதிசயித்துக் கொண்டிருக்கும்போது ஆனந்தவல்லி அகக்களிப்புடனே, 'என்னை வேண்டி நீங்கள் ஆணாகவே இருந்து விடுங்கள்' என்றாள். உடனே சம்பந்தி முதலியார் வந்து, மகளைப் பார்த்து, 'ஆம் அம்மா! ஆண் பிள்ளை இல்லையென்று உன்

தாயாருக்கும் எனக்கும் உண்டாயிருக்கிற வருத்தம் தீரும் பொருட்டு நீ ஆணாகவே இருந்துவிடு' என்றார். அப்போது நான் ஞானம்பாளை நோக்கி, 'இவர்களுடைய பேச்சைக் கேட்டுக்கொண்டு என்னைத் தெருவில் விடாதே, ஞானம்பாள்' என்றேன்."

இப்படி முடிகிறது வேதநாயகம் பிள்ளை எழுதிய "வசன காவியம்". எந்த மொழியிலுமே முதல் நாவல் என்கிற கிரந்தம் ஒரு நல்ல அர்த்தத்தில் தான்தோன்றியாகத்தான் இருக்க முடியும். இப்படித் தான்தோன்றியாக உலகில் பல பாஷைகளிலும் வந்து வழக்கிலுள்ள எந்த நாவலுக்கும் சளைத்ததல்ல பிரதாப முதலியார் சரித்திரம்.

கடைசியாக வேதநாயகம் பிள்ளையின் வசன நடையைப் பற்றி ஒரு வார்த்தை. கொடுத்திருக்கிற உதாரணங்களிலிருந்து அவர் கூடியவரையில் பேச்சு நடையையே உபயோகிக்க முயன்றார் என்பதும், வசனம் என்றால் ஆயாசம் தராததாக இருக்கவேண்டும் என்ற கொள்கையுடையவர் என்பதும் தெளிவாகியிருக்கும் என்றே நம்புகிறேன். நாவலில் பல இடங்களில் அவர் நடையே அவர் விஷயத்துக்கு அற்புதமான மெருகேற்றியிருக்கிறது என்று சொல்லவேண்டும். சில சமயங்களில் வார்த்தைகள் தங்கு தடையின்றி வராமல் தட்டித்தடுமாறி வந்தாலும்கூட, அதுவும் பேசக் கற்றுக்கொள்ளும் ஒரு குழந்தையின் மழலைபோல இன்பம் தருவதாக இருக்கிறது என்றுதான் சொல்லவேண்டும். தெளிவு தர மொழிவதில், வளமான வர்ணம் நிறைந்த பேச்சு வார்த்தைகளை எழுத்தில் கலப்பதில், வேகம் கெடாமல் நடை பயிலுவதில், அழுத்தம் குன்றாமல் வாக்கியங்களைப் பிணைப்பதில் வேதநாயகம் பிள்ளை தமிழ் வசன நடையைச் சரியான பாதையில் நடக்கவைத்தார் என்று எனக்குத் தோன்றுகிறது.

பி. ஆர். ராஜமையரின்

# கமலாம்பாள் சரித்திரம்

## 1

ஆடுசாபட்டி அம்மையப்ப பிள்ளை அவர்களைத் தெரியுமா உங்களுக்கு? 'கமலாம்பாள் சரித்திர'த்தில் அவரைச் சந்திக்கலாம். ஒரு தரம் சந்தித்துவிட்டால் அவரை யாராலும் மறக்கவே முடியாது. அவர் மதுரை ஜில்லா பள்ளியில் தமிழ்ப் பண்டிதர்.

"அவருக்குச் சுமார் ஐம்பது வயதிருக்கலாம். அவர் பிறந்த ஊர் ஆடுசாபட்டி என்று ஐந்தாறு வீடுகளும் ஒரு புளிய மரமும் உள்ள ஒரு பெரிய பட்டணம். அவர் அகாதசூரர். எமகம், திரிபு என்று இப்படிப் பாட ஆரம்பித்தாரானால் குரங்குகள் அத்திப் பழத்தை உதிர்ப்பது போல சடசடவென்று உதிர்த்து விடுவார். யாராவது தமிழ் தெரிந்தவன் அவர் கையிலகப்பட்டு விட்டால் ராம பாணம் போட்டாற்போல மூச்சு விடுமுன்னே முந்நூறு நானூறுக் கணக்காகப் பாட்டுகளை வீசி அவன் காதைச் சல்லடைக் கண்களாகத் துளைத்து விடுவார்....

"அம்மையப்ப பிள்ளையுடன் ஏதாவது ஒரு விஷயத்தைக் குறித்துத் தர்க்கம் செய்ய ஆரம்பித்தால் ஆயிரக் கணக்காகப் பாட்டுகளைச் சொல்லி எதிராளியின் வாயை அடக்கி விடுவார். அந்தப் பாட்டுகள் எடுத்த விஷயத்துக்குச் சம்பந்தமில்லாவிட்டால் என்ன? அதனால் என்ன குறைவு? பாட்டுகள் பாட்டுகள்தானே! அதுவும் அவர்

பாட ஆரம்பித்தால் அவருக்குச் சரியாக மகா வைத்திய நாதய்யர்கூடப் பாட முடியாது.

"ஒரு நாள் மதுரை கட்டை செட்டி மண்டபத்தில் நமது புலவர் கம்ப ராமாயணத்தில் சீதா கல்யாணப் படலத்தை எடுத்துப் பிரசங்கம் செய்துகொண்டிருந்தார். அப்பொழுது தற்செயலாகத் தெரு வழியே போன ராம பக்தன் ஒருவன், ராமர் என்ற பெயரைக் கேட்டுவிட்டு, ராம கதை போலிருக்கிறது, கேட்போம் என்று உள்ளே வந்தான். அப்பொழுது அம்மையப்ப பிள்ளை வாயினின் றும் எச்சில் காத வழிக்குத் தெறிக்கக் கண்கள் சிவந்து வெகு உக்கிரமான முகத்துடனும் கடூரமான குரலுடனும் அதிக உற்சாகமாய்ப் பிரசங்கம் செய்ய, வந்த ராம பக்தன், 'ராம—ராவண யுத்தம்போலிருக்கிறது. அதுதான் இவர் இவ்வளவு கோபாவேசமாயிருக்கிறார். நல்ல பக்தர் போலும்!' என்று இவரை மனதுக்குள் கொண்டாடிக் கொண்டிருக்கும்போதே புலவர், 'ராமன் சீதையைக் கல்யா ணம் பண்ணிக் கொண்டான். சீதையைக் கல்யாணம் பண்ணிக் கொண்டான் ராமன்' என்று கைகளை வீசிக் கொண்டு கர்ச்சித்தார். அதைக் கேட்டு அந்த ராமபக்தன் திடுக்கிட்டு எழுந்து கண்களில் தீப்பொறி பறக்க, 'ராமன் அப்படித்தான் சீதையைக் கல்யாணம் செய்து கொள்வான். அதற்கு நீர் என்ன ஓய் கோபிக்கிறது?' என்று அதட்டிக் கொண்டு அவரை ஓங்கி அடிக்கச் செல்லவே, சுற்றியிருந்த வர்கள் அந்த ராம பக்தனைக் கையைப் பிடித்திழுக்க, அவன், 'விடுங்கள், சீதையை மணம் செய்ததற்கு இவ்வளவு கோபம் கோபிக்கிற சண்டாளனைக் கொல்லுகிறேன்' என்று சொல்ல, 'அது கோபமல்ல. உள்ள சாந்தமே அவ் வளவுதான் அவருக்கு' என்று சொல்லி அவனைச் சமா தானப்படுத்தினார்கள். பிள்ளை அவர்களோ நடுநடுங்கிப்

பாதிக் கல்யாணத்தில் நிறுத்திவிட்டு, 'ராமன் பாடு, சீதை பாடு, அவர்கள் விஷயத்திற்கு நான் வரவில்லை. போதும், போதும்' என்று அன்று முதல் பொது ஸ்தலங்களில் கதாப் பிரசங்கம் செய்வதை நிறுத்திவிட்டார். இவ்விதம் சங்கீத ஞானம், சாரீர சம்பத்து, தமிழ் வித்துவத்துவம் இவைகளில் இவர் சிறந்தவராயிருந்ததுமன்றி நல்ல புத்திமானாயும் இருந்தார்.''

அம்மையப்ப பிள்ளை நமக்கு அறிமுகமாகும் காட்சியில் அவர் மெட்ரிகுலேஷன் வகுப்புக்கு நளவெண்பா பாடம் சொல்லித்தந்துகொண்டிருக்கிறார். சுயம்வர காண்டத்தில், 'கோதை மடவார் தம் கொங்கை மிசைத் திமிர்ந்த' என்ற பாட்டைப் படித்துவிட்டு, "தான் படித்ததைக் கேட்டு எல்லோரும் மெச்சுகிறார்களாவென்று சுற்று முற்றும் பார்த்தார். அந்த வகுப்பில் ராமசாமி என்று ஒரு பையன் உண்டு. அவன் வெகு வேடிக்கையாகப் பேசுவதால் அவனைத் 'தென்னாலிராமன்' என்று பையன்கள் கூப்பிடுவது வழக்கம். அந்தத் தென்னாலிராமன், வாத்தி குறிப்பை அறிந்து, 'சுவாமி, இன்னொரு தரம் படிக்க வேணும். கேட்கக் கேட்க இன்பமாயிருக்கிறது. புஸ்தகமோ நள வெண்பா. படிப்பதோ இன்னொன்று சொல்ல வேண்டாம்' என, உபாத்தியாயர் உளங்குழைந்தவராய், 'படிக்கிறது யார்? ஆடுசாபட்டி அம்மையப்ப பிள்ளை என்று சொல்லேன்' என்றார். பையன், 'சுவாமி, தங்கள் பேர் முழுவதும் நன்றாய்ச் சொல்ல வேண்டும்' என்றதும் குரு, 'என் பெயரா? சொல்லுகிறேன் கேள். கடல் சூழ்ந்த இங்கிலவலயத்திற்கு ஒரு திலகம் போன்ற ஆடுசாபட்டி மகா வித்துவான் அம்மையப்ப பிள்ளை,' என்றார். தென்னாலி ராமன் (மெதுவாக) 'ஒரு வண்டி காணுதுபோலிருக்கிறதே' என்று சொல்லிவிட்டு, 'சுவாமி முன்போல முழுவதும்

சொல்லவில்லையே' என்றான். வாத்தியார், 'நாழிகை யாகிறது. மேலே செல்வோம்' என, பையன், 'முழுவதும் சொன்னால்தான்' என்றான். 'உடனே வாத்தியார், 'கடல் சூழ்ந்த இந்த நிலவலயத்திற்கு ஒரு திலகம் போன்ற ஆடுசாபட்டியில் அவதரித்த அண்டம் புகழும் அஷ்டாவதானம் அருந்தமிழ்ப் புலவர் மகா வித்துவான் அம்மையப்ப பிள்ளை அவர்கள். இப்பொழுது சரிதானா?' என்றதும் எல்லோரும் கொல்லென்று சிரித்தார்கள். வாத்தியார் வாயில் கை பொத்திக்கொண்டு, 'சிரிக்காதேயுங்கள். ஹெட்மாஸ்டர் வந்துவிடப் போகிறார்?' என்று சொல்லிவிட்டு, மறுபடி பாட்டைப் படித்து, 'மாவிந்த நகரத்தில் ஸ்திரீகள் மார்பிலணிந்த சந்தனமானது அவர்கள் ஸ்நானம் செய்யும்போது சேறாகித் தெருவெல்லாம் நிறைந்திருப்பதால் அந் நகரத்து வீதிகளில் செல்லும் யானைகள் அச்சேற்றில் வழுக்கி விழுகின்றன. அவ்வளவு சந்தனம்! அவ்வளவு சேறு! பேஷான பாட்டு. ஆஹா!' என்று பிரசங்கித்துவிட்டு மறுபடியும் அந்தப் பாட்டைப் படிக்கப் போனார். அப்பொழுது தென்னாலிராமன் எழுந்து, 'சுவாமிகளே, ஒரு சந்தேகம். அந்த ஊரில் யானைகளே அந்தப் பாடு பட்டால் மனிதர்கள் நடப்பதெப்படி?' என்றான்.

"வாத்தியார்;—அந்த ஊரில் மனிதர்கள் நடப்பார்களோ? பல்லக்குச் சவாரி செய்வார்கள். இந்தத் தரித்திர பட்டணங்களைப் போலவா?

"தென்னாலிராமன்:—சுவாமி, எல்லாரும் பல்லக்கேறினால் சுமக்கிறவர்கள் யார்? சுமக்கிறவர்கள் என்னமாய் நடப்பார்கள்?

"வாத்தியார்:—பல்லக்கு என்றால் பல்லக்கா? சாரட்டுகளில் சவாரி செய்வார்கள்.

"தென்னாலி ராமன்:—அப்படியானால் குதிரைகள் வழுக்கி விழாதோ?

"வாத்தியார்:—இப்படியெல்லாம் கேட்டால் சரிப்படுமா? பாட்டில் மூன்று சங்கதிகள் சொல்லியிருக்கிறார். புகழேந்தியின் சாமர்த்தியமே சாமர்த்தியம். என்ன? அவ்வூரில் சந்தனம் ஏராளமாய்ப் பூசிக்கொள்ளுகிறார்கள். அது தெருவெல்லாம் சேருகிறது. மூன்றாவது அந்த ஊரில் யானைகள் உண்டு.

"இன்னொரு பையன் எழுந்து, 'சுவாமி இன்னும் இரண்டு சங்கதிகளை விட்டுவிட்டீர். அந்த ஊரிலேகூட ஸ்திரீகள் உண்டு. இரண்டாவது அவர்கள்கூட ஸ்நானம் செய்வது உண்டு' என்றான். வாத்தியார், 'கலிகாலத்துப் பிள்ளைகள் மகா அதிகப்பிரசங்கிகள்' என்றார். தென்னாலி ராமன், 'யார் சுவாமி அதிகப்பிரசங்கி? பேச்சு மிஞ்சுகிறாற் போல இருக்கிறது' எனவே, வாத்தியார், 'அப்பா நான் தான் அதிகப்பிரசங்கி, நீங்கள் எல்லாம் பெரியவர்கள்' எனக் கோபித்துக்கொண்டு பின்னுள்ள பாட்டுக்களை வாசித்து அதிவேகமாய் அர்த்தம் சொல்லிக்கொண்டு போகவே, பையன்கள் இவர் பிரசங்கத்தைச் சற்றும் கவனியாமல் சிலர் வம்பு பேசினார்கள். சிலர் அடுத்த மணிப் பாடத்தைப் படித்தார்கள். சிலர் தூங்கினார்கள். சிறிது நேரத்துக்கெல்லாம் வாத்தியாருக்கும் தூக்கம் வந்து விட்டது."

இப்படியாக நமக்கு அறிமுகமாகிற தமிழ் ஐயாவை நமக்கெல்லோருக்கும் முன்னமேயே தெரியுமே என்று தான் சொல்லத் தோன்றுகிறது. ஒருதரம் அறிந்து கொண்டுவிட்டால் மறக்கவே முடியாத சிருஷ்டி இது. கேலியாகவும் கிண்டலாகவும் மட்டும் அவரைச் சிருஷ்டித்து விடவில்லை ராஜமையர். கதையில் வருகிற முக்கிய

பாத்திரங்களுக்கும் கதைப் போக்கிற்கும் அவசியமானவ ராக அவரை நம் கண்முன் நிறுத்துகிறார். அநுதாபத் துடன் உருவாக்கி அவரும் ஒரு முக்கியமான சந்தர்ப்பத் தில் உபயோகப்படுகிறார் என்பதாகக் கதை சொல்லு கிறார் ஆசிரியர். பிரதாப முதலியார் என்கிற முதல் தமிழ் நாவல் வெளி வந்து பதினாறு வருஷங்களுக்குள் (1894) வெளி வந்த இரண்டாவது நாவல் கமலாம்பாள் சரித்திரம் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு பார்க்கும்போது இந்தப் பதினாறு வருஷங்களில் தமிழில் நாவல் கலை வெகு வாக முன்னேறிவிட்டது என்றுதான் சொல்லவேண்டும். கதாபாத்திரங்களை உருவாக்கி நம் முன் நிறுத்தும் சாமர்த்தி யத்தில் ராஜமையருக்கு ஈடு என்று வேறு யாரையுமே இன்றும் சொல்ல முடியாது. அவர்களை அவர் முதல் முதலாக நமக்கு அறிமுகம் செய்துவைக்கும் காட்சிகளும் அற்புதமாக அமைகின்றன.

"சுப்பு வீட்டில் குடத்தை இறக்கினதுதான் தாமதம், ஈரப் புடவையுடனே ஒரு எருமுட்டையைக் கையில் எடுத் துக்கொண்டு கமலாம்பாள் வீட்டை நோக்கி அடுப்பு நெருப்புக்காகப் புறப்பட்டாள். யதார்த்தத்தில் தன் வீட்டிலேயே நெருப்பு இருந்தது. ஆனால் பொன்னம்மாள் சொன்ன வார்த்தைகளைக் கமலாம்பாளிடம் ஒன்றுக்குப் பத்தாகச் சொல்லவேண்டியது அதிக அவசியமாக இருந்தது.

"சுப்பு அப்படி அதிகக் கெட்டவள் அல்ல. நல்ல ஈகைக் குணமுள்ளவள். மனிதர்மேல் அபிமானமுள்ளவள், மற்ற நாட்டுப் பெண்கள் தங்கள் மாமியாருடன் சண்டை செய்வதைக்காட்டிலும் இவள் தன் மாமியாருடன் அதிக மாய்ச் சண்டை செய்வதில்லை. சுக்கிரவாரம், வருஷப் பிறப்பு முதலிய நாட்களில் தன் மாமியார் என்ன சொன்ன

லும் அவளுடன் சண்டை செய்யமாட்டாள். ஆனால் மறு நாள் வட்டியும் முதலுமாக யுத்தம் நடக்கும். சில ஸ்திரீகளைப்போல் குடும்ப யுத்தங்களில் அவள் இருபது வருஷத்திய குற்றக் கணக்கை எடுத்துக் கூறுவதில்லை பதினைந்து வருஷத்துக்கு முன் ஒரு தினத்தைச் சொல்லி அன்று உனக்கும் உன் மாமியாருக்கும் என்ன நடந்தது என்றால் அவள் திட்டமாய்ச் சொல்ல முடியாது. ஆனால் பதினைந்து வருஷத்துக்கு இப்பால் இருந்தால் சகல சங்கதிகளும் அவள் மனத்தில் பதிவு ஏற்பட்டிருக்கும். ஆகையால் பதினறு வருஷத்துக்கு முன் அவள் மாமியார் அவளை 'ஸாகஸி' என்று வைத அன்றைக்கு நடந்த சரித்திரத்தைச் சொல்லச் சொன்னால், அன்றைக்கு இன்ன கறி, இன்ன கூட்டு, மோர் புளித்ததா புளிக்கவில்லையா, இன்ன துவையல், யார் சமையல், அதில் என்ன குற்றம் என்பதை நிர்ணயமாய், அப்பீலுக்கிடமில்லாமல் சொல்லக்கூடிய திறமை அவளுக்குண்டு.

"....வம்பர் மகாசபைக்குச் சுப்பம்மாள்தான் கனம் பொருந்திய அக்ராசனாதிபதி அவர்கள். அவளுக்கு அந்தக் கௌரவப் பட்டத்தைப் பகிரங்கமாகக் கொடுக்காவிட்டாலும், அப்பட்டத்திற்குரிய அதிகாரத்தை அவள் அநுபவிப்பதுமின்றி அதற்குரிய மரியாதையையும் எல்லோரும் முணுமுணுக்காமல் அவளுக்கே செலுத்தி வந்தனர். அந்த மகா சபைக்கு ஏதாவது சமாசாரப் பத்திரிகை உண்டோ என்று சிலர் ஆவலுடன் வினவலாம். ஆனால் அச்சிலடங்காத அநேக சங்கதிகளும் அச்சில் போடக் கூடாத அநேக ரகசியங்களும் அந்தச் சபையில் முக்கியமாய் நடந்தேறி வந்தபடியால், அதற்குச் சமாசாரப் பத்திரிகை ஒன்றும் கிடையாது. அதற்குப் பதிலாக, சமாசார ஸ்திரீகள் என்று சொல்லத் தக்க சிலர் உண்டு....

ஸ்திரீயோ புருஷனோ, யாவராயினும் சரி, அவர்கள் எவ்வளவு தந்திரிகளானாலும் சரி, அந்தரங்கத்தை இந்த உத்தியோகஸ்தர்கள் கிரஹிப்பது திண்ணம்.

"இவ்வாறு கிரஹிக்கிற சக்தி மட்டும்தான் அவர்களுக்குண்டென்று நினைக்கவேண்டாம். கற்பனா சக்தி குறைந்த நமது தமிழ் வித்வான்கள் போல ஒருவர் சொன்னதையே சொல்வதில் அவர்களுக்குச் சற்றேனும் திருப்தியில்லை. பொய்யை நிஜமாக்குவதிலும் நிஜத்தைப் பொய்யாக்குவதிலும், நரியைப் பரியாகவும், பரியை நரியாகவும் மாற்றிய பரமசிவனைக்காட்டிலும் சமர்த்தர்....கல்லும் புல்லும் உருகப் பேசுவர்...."

சுப்பம்மாளை தலைவியாகக் கொண்ட இவ் வம்பர் மகா சபைதான் இந்த நாவலில் 'வில்லன்.' 'ஆபத்துக் கிடமான அபவாதம் அல்லது கமலாம்பாள் சரித்திரம்' என்னும் இந்த நாவலில் வருகிற சம்பவங்கள் இவ்வம்பர் மகாசபையின் காரியங்கள் காரணமாக நடப்பவைதான். உரிய இடத்தில் ஆசிரியர் வம்பர் மகாசபையின் மற்ற அங்கத்தினர்களையும் தன் வாசகர்களுக்குத் திருப்திகரமாகவே அறிமுகம் செய்து வைக்கிறார்.

## 2

நானா சித்திர விசித்திரங்களை அழகாகச் சொல்லிக் கொண்டே ஆசிரியர் ராஜமையர் கதையை நேராக வேகமாக நடத்திச் செல்லுகிறார். அவிழ்க்க முடியாத சிக்கல் சிடுக்குகள் எதுவும் கிடையாது கதையிலே. அண்ணன் தம்பிகளிலே அண்ணன் செல்வத்துடனும் செல்வாக்குடனும் வாழுகிறான். தம்பியின் நிலை இறங்கிக்கொண்டிருக்கிறது. அண்ணனுக்கு வாய்த்தவள் உத்தமபத்தினி. அவள்தான் 'கதாநாயகி'—கமலாம்பாள். தம்பிக்கு வாய்த்

தவள் "தஞ்சாவூர்ப் பெண். இந்தப் பூமண்டலத்திற்குள் அவளுக்கு ஒருவரும் நிகரில்லை. யாரையும் லட்சியமில்லாமல் எடுத்தெறிந்து பேசுவாள். பாவம்! சுப்பிரமணிய அய்யரை (அதாவது தன் கணவனை) பம்பரமாய் ஆட்டி வைப்பாள்." இந்தப் பொன்னம்மாளும் வம்பர் மகாசபையினரும் சேர்ந்து கமலாம்பாளுக்கும் அவள் கணவனுக்கும் ஒன்றன்பின் ஒன்றாகப் பல தீங்குகள் விளைவிக்கிறார்கள். அடுக்கடுக்காக வருகிற கஷ்டங்களிலே கமலாம்பாளும் அவள் புருஷன் முத்துஸ்வமி ஐயரும்கூடக் கலங்கிவிடுகிறார்கள். மதுரை ஜில்லாவில் சிறுகுளம் என்கிற ஒரு கிராமத்தை மையமாகக் கொண்டு நாம் மதுரை, சென்னை, சிதம்பரம், காசி எல்லாம் போய் வருகிறோம்.

அசாதாரணமான, அவநம்பிக்கை யூட்டக்கூடிய சம்பவங்கள் எதுவுமே இந்த நாவலில் இல்லை என்பதை இதன் பெருமைகளில் ஒன்றாகச் சொல்லலாம். வேண்டுமென்றே மிகைப்படுத்திக் கூறுகிற இடங்களில் கூட ஆசிரியர் நம்பிக்கையின் எல்லைகள் தாண்டிவிடாதபடி பார்த்துக் கொள்கிறார். கெட்டவர்களும் நல்லவர்களாகிவிடுகிற விந்தையை ஒரு மனோபக்குவத்துடன் விவரிப்பது இந்த நாவலின் ஒரு தனிச் சிறப்பு. 'கெட்ட குடியே கெடும். பட்ட காலிலே படும்' என்கிற பழமொழியை நம்பி ஒன்றன்பின் ஒன்றாகக் கமலாம்பாள் குடும்பத்துக்குக் கஷ்டங்கள் வருகின்றன என்று விவரிக்கிற போதும்கூட ஆசிரியர் படிப்படியாகவே சொல்ல முயலுகிறார். மூலைக்கொருவராக, ஒருவரை ஒருவர் தேடிக்கொண்டு திரியும் போது, எப்படியோ காசியில் போய் எல்லோரும் கூடிவிட ஒரு வாய்ப்பு ஏற்பட்டுவிட்டது.

கதையிலே ஊடுருவி நிற்கிற காதலர்கள் இருவரைப் பற்றித் தன் திறமை முழுவதையும் காட்டிச் சித்திர வேலை

கள் செய்திருக்கிறார் ஆசிரியர் ராஜமையர். அதைக் கொஞ்சம் கவனிப்போம்.

கதையின் ஆரம்பத்தில் முத்துஸ்வாமி ஐயர் பட்சணம் தின்றுகொண்டிருக்கிறார். அப்போது அவருடைய பத்தினி காமலாம்பாள் கேட்கிறாள்: "'இப்படி பட்சணம் தின்று கொண்டிருந்தால் நம்முடைய குட்டி கல்யாணிக்கு எப்பொழுது கலியாணம் செய்கிறது?'

"அவர்: 'யாரே அழகுக்கு அழகு செய்வார்? அவளே கல்யாணி ஆய்விட்டதே? இனி அவளுக்குக் கல்யாணம் எதற்கு?'

"மனைவி: 'உலகம் புத்தியற்ற உலகம். ஆயிரம் ஐந்நூறு என்று செலவழித்துக் கலியாணங்களைச் செய்து கொண்டு வருகிறார்கள். சுருக்கமாகக் கல்யாணி என்று பெயரை வைத்துவிட்டு இருந்துவிடலாமே. நமக்குத் தெரிந்த பரம ரகசியம் ஒருவருக்கும் தெரியவில்லை பாருங்கள்.'"

கல்யாணி பக்கத்து வீட்டிலிருந்து புஸ்தகமும் கையுமாக வருகிறாள்.

"'ஒரு காரியம். புஸ்தகம் ஹஸ்தபூஷணம் என்றபடி, நமது கல்யாணி அண்ணாவைக் காணும்போதெல்லாம் கையில் புஸ்தகமில்லாமலிருக்கிறதில்லை' என்றார் ஐயர். அதற்கு அச்சிறுமி, 'இல்லை அண்ணா! படித்துக்கொண்டு தானிருந்தேன். மீனாட்சியை வேண்டுமானால் கேளுங்கள் அண்ணா' என்றாள். அவள் கையிலிருந்த புத்தகம், நல்ல பாட்டுகளாய்த் தெரிந்தெடுத்து உரையுடன் சேர்த்துச் செய்த கம்பராமாயணச் செய்யுள் திரட்டு.

"குழந்தை கல்யாணியைப் பார்த்து, 'உனக்கு ராமனைப்போல் புருஷன் வேண்டுமோ? லட்சுமணனைப்போல் வேண்டுமோ?' என்று கேட்டார் முத்துஸ்வாமி ஐயர்.

கல்யாணி வெட்கத்துடன் தலை குனிந்து மௌனமா யிருந்தாள். அப்பொழுது அவர், 'ராமன் கறுப்பு. லட்சுமணன் சிவப்பு. ராமன் அப்பாவி. அவனுக்கு அழத்தான் தெரியும். லட்சுமணன் நல்ல தீரன். பார். ராமன் 'காட்டுக்குப் போ' என்றதற்கு முன் மரவுரியும் கையுமாய்ப் புறப்பட்டு விட்டான். லட்சுமணனே தைரியமாய் எல்லாரையும் கொன்றுவிடுகிறேன் என்று வில்லைத் தூக்கினான். ராமனுக்கு லட்சுமணன் எவ்வளவோ திறம். எல்லாவற்றையும் யோசித்து, சீக்கிரம் பதில் சொல். நான் கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்' என்று பரிகாசம் செய்தார்."

இந்தப் பத்து வயதுப் பெண் கல்யாணிக்குக் கட்டுக் கட்டாக ஜாதகங்கள் வந்தன. தேடி எடுத்து ஸ்ரீநிவாஸன் என்று ஒரு பையனின் ஜாதகம் பொருந்துகிறது என்று எடுத்தார்கள். ஆசிரியர் அந்தப் பையனை நமக்கு ஆடுசா பட்டி அம்மையப்ப பிள்ளையவர்களின் தமிழ் வகுப்பில் அறிமுகம் செய்து வைக்கிறார். அத்தியாயத்தின் தலைப்பே, 'அழகுள்ள நல்லபிள்ளை' என்பதுதான்.

"அவனுடைய பூங்கொடி போல் மெல்லிய சரீரமும், உருக்கியோடவிட்ட தங்கம் போன்ற நிறமும், ரோஜா புஷ்பம் மலர்ந்தது போன்ற முகமும், ஓயாது சலித்துக் கொண்டிருக்கும் கண்களும், நீண்டு கிளியின் மூக்குப் போல சிறிது வளைந்து முனையில் கூர்மையாயுள்ள மூக்கும், குதித்துக் குதித்து நடக்கும் நடையும், மழலைச் சொல் மாறாத வார்த்தையும், அவன் புத்தியும் உற்சாகமும், சாந்தமும், குணமும் அவனை அறிந்தவர் உள்ளத்தை அடிமைப்படுத்தும் தன்மையனவா யிருந்தன. அவனுடன் படிக்கும் கொட்டைமுத்து ராமையா என்ற பையன் அவனை 'லேடி' (ஏ பெண்ணே) என்று கூப்பிடுவான். தொண்டி சுப்பையா அவனை 'என் கண்மணியே' என்பான். பெருங்

தினி வைத்தி அவனை 'மாம்பழம்' என்று கூப்பிடுவான்... இங்கிலீஷ் வாத்தியார் நித்தியானந்தம் பிள்ளைக்கு அந்தப் பள்ளிக்கூடத்திலேயே அவன் ஒருவனைத்தான் தெரியும். ஹெட்மாஸ்டர் திருமலாச்சாரியார் பாடம் நடக்கும்போது அவன் ஒருவனைத்தான் பார்த்து நடத்துவார். கடுகடு என்று கடுவன் பூனைக்கு நிகராய்க் கோபிப்பதையே தொழிலாக உடைய சம்ஸ்கிருத வாத்தியார் அப்பா சாஸ்திரிகள்கூட இவன் தமிழ் படிப்பவனாயிருந்தாலும் இவனைக் கண்டு ஒரு நாளைக்கு ஒரு தடவையாவது பேசாமல் வீட்டுக்குப் போகமாட்டார்."

ஸ்ரீனிவாஸனுக்கு வயது பதினாறு. சுப்பராயனுக்கு வயது இருபது. இருவரும் மெட்ரிகுலேஷன் வகுப்பில் சேர்ந்து படிக்கிறார்கள். கல்யாணியின் கல்யாணம் நிச்சயமானதும் ஸ்ரீனிவாஸன் அதைத் தன் நண்பன் சுப்பராயனிடம் சொன்னான். பெருமையுடன் தனக்கு வர இருக்கு மனைவியை பற்றிப் பேசினான். "'ஒரு சிறு பெண் கர்ப்பூர் வைத்துக்கொண்டு பாட்டுப் பாடினாளாம். கேள் கம்ப ராமாயணம் என்ன, தாயுமான சுவாமி பாடல் என்ன, தேவாரம், திருவாய்மொழி, கப்பற் பாட்டு. ஜாவளி இப்படி, தினுசுக்கு ஐந்தாறு ஜமாய்த்துவிட்டாளாம். ஏகக் கூட்டமாம், புருஷர்களும் பெண்களும். அதுவும் ராமாயணம் பாடுகிறபோது—கங்கைப் படலத்து முதற் பாட்டுக் கள் போல இருக்கிறது-குதிக்காதவர்கள் பாவம்! தாயுமானவர் பாடல் பாடுகிறபோது உருகி அழாதவர்கள் பாவமாம்! சொல்லுகிறான் சொல்லுகிறான் அதிக அற்புதமாக இருக்கிறது.... அந்தப் பெண்தான் என் அகமுடையாள்.'

"சுப்பராயன்—'ஆ, அப்படியா? அவ்வளவு பாட்டா? உன் அகமுடையாளா? பத்து வயதுக் குட்டியல்லவோ?'

"ஸ்ரீனிவாஸன்—'பத்து வயதுக் குட்டியானல்?... அவள் குணத்தை ஊர் முழுதும் கொண்டாடுகிறார்களாம். வீண் வம்பு, இரைந்த சொல் கிடையாதாம்.'

"சுப்பராயன்—'நீதான் அதிர்ஷ்டசாலி அப்பா?' "

இப்படி நண்பர்கள் இருவரும் பேசிக்கொண்டிருந்த போது "அம்மையப்ப பிள்ளையவர்கள் திருக்கூத்து நடந்து எல்லோரும் இடி இடியென்று சிரித்த இரைச்சல் கேட்டு இருவரும் ஓடிவர அம்மையப்ப பிள்ளை அவர்கள் பொங்கிய மசியால் செம்புள்ளி கரும்புள்ளி குத்திக்கொண்டு நின்றதைக் கண்டார்கள். உடனே ஸ்ரீனிவாஸன் அவர் நிலைமையைக் கண்டு பரிதபித்து தன் சட்டையில் ஒன்றைக் கழற்றி அவருக்குக் கொடுத்து, தன் கைக்குட்டையால் அவர் முகத்தைத் துடைத்தான். வாத்தியார் இவன் செய்த உபகாரத்துக்காக, கண்களில் நீர் ததும்ப இவனுக்கு வந்தனமளித்து, 'நீ சீக்கிரம் நல்ல பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டு நெடுங்காலம் சுகமாய் வாழ்ந்திருப்பாய்' என்று மனப்பூர்வமாய் ஆசீர்வதித்தார். அருகிலிருந்த சுப்பராயன், 'கல்யாணத்திற்கு முகூர்த்தம் வைத்திருக்கிறது' என்று சொன்னான். வாத்தியார் ஸ்ரீனிவாஸன் கையைப் பிடித்துக்கொண்டு, 'எனக்கு நீ இந்தச் சங்கதியைச் சொல்ல வேண்டாமா? எங்கே, எப்பொழுது கல்யாணம்?' என்று விசாரித்ததில், 'சிறுகுளம் முத்துஸ்வாமி ஐயர்' எனவும், அவருக்கு வந்த சந்தோஷத்திற்கு அளவில்லை. 'என் தாதா முத்துஸ்வாமி ஐயரா! அடடா! அவர் முதல் வள்ளல் அன்றோ! நான் அவருடைய அடிமையல்லவோ! அந்த மகான் பெண்ணு உனக்காக நிச்சயமாகியிருக்கிறது? உனக்குக் கடவுள் கிருபை பூர்த்தியாய் இருக்கிறது. எனக்கும் கடிதம் வரும். நானும் வருகிறேன் உன் திருக் கல்யாணத்திற்கு' என்றார்."

கல்யாணத்தை எதிர்பார்த்திருந்த ஸ்ரீனிவாஸனின் மனோநிலையை வெகு அழகாகச் சித்திரித்திருக்கிறார் ஆசிரியர். "ஸ்ரீனிவாஸன் எவ்வளவு புத்திசாலியாக இருந்தாலும், சிறு குழந்தையானதால் உலகத்தை அறியான். பெண்டாட்டி என்றால் 'பாக்குக் கொடுக்க பாக்கியவதி, புஷ்பம் கொடுக்க புண்ணியவதி, சந்தனம் கொடுக்க சரஸ்வதி' என்ற இவ்வித எண்ணம் தவிர வேறு ஒன்றும் அறிய அவனுக்கு வயது போதாது. ஆயினும், 'காதலிருவர் கருத்தொருமித்து ஆதரவு பட்டதே இன்பம்' என்ற சில உண்மைகளை அவன் புஸ்தகங்கள் மூலமாய் அறிந்திருந்தான். பாக்கியிருந்த நாளும் அவனுக்குப் பத்து யுகமாகவே இருந்தன. பகல் வந்துவிட்டால், 'பொல்லாப் பகலே, போகாப் பொழுதே' என்று நிந்தித்துக்கொண்டு எப்பொழுது இரவு வருமென்று எதிர்பார்ப்பான். இரவு வந்துவிட்டால், 'செல்லா இரவே, சிறுகா இருளே' என்று நிந்தித்துக்கொண்டு எப்பொழுது விடியுமென்று ஏக்கமுறுவான். எந்தப் பாடமானாலும் சரி, எல்லாம் கல்யாணத்துக்குப் பிறகு பார்த்துக்கொள்ளலாம் என்று போட்டுவிட்டான்."

ஸ்ரீனிவாஸன்—கல்யாணி கல்யாண விமரிசையையும், அந்தக் கல்யாண சமயத்தில் காதலர் இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்து ஆனந்தப்பட்டுக்கொண்டதையும் அற்புதமாக வர்ணித்திருக்கிறார் ஆசிரியர். தமிழ் வசனத்திலே இதை மிகவும் உன்னதமான ஒரு காட்சி என்று சொல்லத்தான் வேண்டும். நேரடியாகச் சொல்லி விஷயத்தைத் தெளிய வைக்கிற காரியத்தை ராஜமையர் மிகவும் சிறப்பாகச் செய்திருக்கிறார். "தன்னருகில் ஒரு லட்சணமான பெண் தன் மனைவியாக உட்கார்ந்திருப்பதை நினைக்க அவனுக்கு உள்ளம் பூரித்தது. புதிதாய்ப் பட்டாபிஷேகமாகும்

ராஜகுமாரனுக்குக்கூட அவ்வளவு சந்தோஷமும் கர்வமும் இருக்காது....அடிக்கடி தொண்டையைத் திருத்திக்கொள்பவன் போல் கர்ச்சித்து இருமினன்...யானை ஆடுவது போல ஆடினன். சில வேளை தன் விரல்களால் கீழே வெகு விரைவாக இங்கிலீஷில் எழுதினன்....சுப்பராயனிடம் சில சில வார்த்தைகளை இங்கிலீஷில் பேசினன்.... ஏதோ புதுமையைக் கண்டவன் போல அடிக்கடி புன்சிரிப்புச் சிரித்தான். நேற்றுவரையில் வேஷ்டி கூடச் செவ்வையாய் உடுக்கத் தெரியாத பையன் இன்று பாராட்டிக்கொண்ட பெருமையைப் பாருங்கள்! ஒருவேளை நாமும் நம்முடைய கல்யாணத்தில் இப்படித்தான் இருந்திருப்போம். மேலும் ஸ்ரீனிவாஸன் குழந்தைதானே!"

இப்படித் தொடங்கிய மணம், கடிதம், சென்னைக் கடற்கரையில் விளையாட்டு, பிரிவு, தாய் தந்தையர் துயர முற்றதறிந்து வருந்துதல் எல்லாமாக வளர்ந்து பெருகுகிறது. கதையைப் படிக்கும்போதும் சரி, படித்து முடித்த பிறகும் சரி, ஸ்ரீனிவாஸனையோ, கல்யாணியையோ மறக்க முடியாதபடி தத்ரூபமாக தாம் நேரில் கண்டறிந்த லட்சிய தம்பதியாக விவரித்திருக்கிறார் ஆசிரியர். பூர்ணத்துவம் பெற்ற ஒரு சித்திரம் என்று சொல்வது பொருத்தமாக இருக்கும்.

காதல் கதையை விஸ்தாரமாகவே விவரித்த ராஜமையர் இதேபோல, பேயாண்டித் தேவன் என்கிற ஒரு கொள்ளைக் கூட்டத் தலைவனின் பிரதாபங்களையும் நம்பும்படியாக விவரித்திருக்கிறார். சற்றேறக் குறைய எட்டுத் தலைமுறைகளுக்கும் அதிகமாகத் தமிழ் நாட்டில் அரசு செலுத்திவந்திருக்கும் கொள்ளைத் தலைவனின் லட்சிய உருவகம் அது. முத்துஸ்வாமி ஐயருக்கு அவன் தீங்கிழைத்துப் பின்னர் வருந்தி கொள்ளைத் தொழிலையே

விட்டுவிட்டு நல்லவனாகிவிட்டான் என்று அறிந்துகொண்டு சந்தோஷப்படுவதில் நமக்கென்ன ஆட்சேபம் இருக்க முடியும்?

## 3

"இனிமேல் காவியங்களை எழுதச் செய்யுளில்தான் முடியுமென்பதில்லை. நமது வசனம் ஒரு பூரணத்தை அடைந்துவிட்டது. இன்று எழுதப்படுகிற செய்யுள் எதையும் விட நமது வசனம் அற்புதமாக அமைந்து விட்டது. நாவல்கள்தான் வரப்போகிற தலைமுறையின் காவியங்கள்" என்று ஸ்டெந்தால் என்கிற ஃபிரெஞ்சு இலக்கிய மேதை ஃபிரெஞ்சு மொழியில் வசன வளம்பற்றிப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் துவக்கத்திலே கூறினதாகச் சொல்வார்கள். பத்தொன்பதாம் நூற்றாண்டின் காவியங்கள் என்று சொல்லவேண்டுமானால், யாருக்கும் எந்தச் செய்யுளுக்கும் முன் டால்ஸ்டாயின் போரும் அமைதியும், டிக்கன்ஸின் நாவல்கள் முதலியன ஞாபகம் வரும் என்பது நிச்சயம். இந்த நாவல்களைப் போன்ற நாவல்களைச் சிருஷ்டிப்பதற்கான பாதையிலே தமிழர்களும் முன்னேறத் தொடங்கிவிட்டார்கள் என்பது ராஜமையரின் கமலாம்பாள் சரித்திரத்தின் தோற்றத்துடன் தெளிவாகிவிட்டது என்று சொல்லலாம். தன் பிரதாப முதலியார் சரித்திரத்தை வசன காவியம் என்று வேதநாயகம் பிள்ளை கூறினார். கமலாம்பாள் சரித்திரமும் ஒரு மகோன்னதமான வசன காவியம் என்றுதான் சொல்லவேண்டும். பிரதாப முதலியாரின் கட்டுக்கோப்பு ஒரு விதத்திலும் அடங்காமல் வழிந்தோடுகிறது. கமலாம்பாள் சரித்திரத்திலே நாவல் உருவம் அற்புதமாகச் சமைந்துவிட்டது. இருபத்தியாறே வருஷங்கள் உயிர் வாழ்ந்த ராஜமையர்

எழுதிய இந்த நாவல் இப்படி ஒரு லட்சிய நாவலாக அமைந்துவிட்டதைத் தமிழர்களின் அதிருஷ்டமென்று சொல்லாமல் வேறு என்னவென்று சொல்வது? தமிழ் நாவல் இலக்கியத்தின் இருநூறு வருஷத்திய வளத்துக்கு ராஜமையர் இந்த நாவலில் அஸ்திவாரம் போட்டுத் தந்து விட்டார் என்று சொல்லத்தான் எனக்குத் தோன்று கிறது.

ஒன்பதாவது வயதில் முதல் முதலாக ஒரு கதைப் புத்தகமாக இதை எடுத்துப் படித்தது முதல், இந்த முப்பத்தைந்து வருஷங்களில், குறைந்த பட்சம் ஏழெட்டுத் தடவைகளாவது கமலாம்பாள் சரித்திரத்தை நான் படித்திருப்பேன். ஒவ்வொரு தடவை படிக்கும்போதும் நவ நவமான ரஸங்கள் இதிலே பல இடங்களில் ஏற்படுகின்றன எனக்கு என்று சொல்வது மிகையாகாது. பிரமாதமான சம்பவங்கள் எதுவும் இல்லை இதில். மிகவும் சாதாரணமான மக்களை, தினசரி நமக்குப் பழக்கமாகிற மக்களை வைத்து, தினசரிக் காரியங்களையே பின்னி எழுதப்பட்டுள்ள இந்த நாவல் படிக்கும்தோறும் படிக்கும் தோறும் இன்பம் பயப்பதில் ஆச்சரியப்பட எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. உலகத்து நல்ல நாவல்கள் வரிசையிலே சிறப்பான இடம் பெற வேண்டிய நாவல் இது என்கிற எண்ணம் ஒவ்வொரு தடவையும் இதைப் படிக்கும்போது எனக்கு வலுக்கிறது.

"இவ்வுலகில் உழன்று தவிக்கும் ஒரு அமைதியற்ற ஆத்மா பல கஷ்ட நஷ்டங்களை அனுபவித்துக் கடைசியாக நிர்மலமான ஒரு இன்ப நிலை அடைந்ததை விளிப்பதே இந்த நவீனத்தின் முக்கிய நோக்கம்" என்று குறிப்பிடுகிறார் ஆசிரியர் ராஜமையர். அவர் பழுத்த வேதாந்தி. விவேகானந்தரால் பிரபுத்த பாரதா எனும் பத்திரிகையை நடத்து

வதற்குத் தகுதியானவர் என்று தேர்ந்தெடுக்கப்பட்டவர். அவர் ஆங்கிலத்தில் எழுதிய Rambles in Vedanta என்பது அந்த ரகத்திலே மிகவும் சிறந்த புஸ்தகங்களில் ஒன்று. ஆகவே கமலாம்பாள் சரித்திரத்திலும் ஆசிரியருடைய வேதாந்த மனோபாவம் பிரதிபலிப்பதைக் கண்டு நாம் ஆச்சரியமடைவதற்கில்லை.

உலகும் ஊரும் முத்துஸ்வாமி ஐயரை உயரத்திலிருந்து தரை மட்டத்துக்கு இறக்கிவிடச் சூழ்ச்சி செய்கின்றன. சூழ்ச்சிகள் பலிப்பது போலவும் இருக்கிறது. ஒன்றன்பின் ஒன்றாக வந்த கஷ்டங்களைத் தாங்காமல் தவிக்கிறார் முத்துஸ்வாமி ஐயர். வம்பர்கள் கதை திரித்து விட்டார்கள்—உத்தமியான அவர் மனைவி கமலாம்பாள் ஒரு சோர நாயகனுடன் ஓடிவிட்டாள் என்று நம்பும்படியாகச் சொல்லிவிட்டார்கள். நொந்த மனத்தவராக இருந்த ஐயர், நம்பத் தயாராகவே இருந்தார். "முத்துஸ்வாமி அய்யருடைய நிலைமை இன்னபடியென்று சொல்ல முடியாது. 'ஐயோ பகவானே, நீயேன் என்னை இப்படிச் சோதிக்கிறாய்? பகவான் என்று நீ ஒருவன் இருக்கிறாயோ, அதுவும் இல்லையோ? குழந்தையை யிழந்தேன், சகோதரனை யிழந்தேன். சொத்தனைத்தையு மிழந்தேன். அவ்வளவும் போதாதென்று என் பெயரையும் பெண்டாட்டியையுமா இழக்க வேண்டும்? ஐயோ ராட்சஸி, எனக்கு எமனாக வந்தாயா? நீ பேசாமல் கொஞ்ச நாளாயிருந்த போதே எனக்குச் சந்தேகமுண்டு. ஸாஹஸி! என் காலைப் பிடித்துக் கட்டி யழுதையா, நீலி சண்டாளி! முகரையைப் பாரு. முகரையைக் குத்து. அந்த ஸாஹஸக் கண்ணிலே அழகென்ன வேண்டியிருக்கிறது, அழகு! கன்னத்திலிறைந்து வரிசையாக இருக்கிறதே அந்தப் பல்லை உடை! சிவ சிவ! நான் இவளுடன் வாழ்ந்திருக்க வேண்டுமா?

....தாயைப் போலப் பெண். ஸ்ரீநிவாஸா, ஜாக்கிரதை! என்னைப் போல மோசம் போகாதே!...கோவிலென்ன குளமென்ன? எல்லாவற்றையும் நெருப்பை வைத்துக் கொளுத்து. கண்கள் நிறைந்த ஆகாயமே, உனக்குமா கண் தெரியவில்லை? உனது இடியோசைகள் எங்கே ஒளிந்து விட்டன? இந்த வீண் இழவுகளை ஒரு இடியில் தகர்த் தெறிய மாட்டாயா?' என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டு வழி நடந்தார்."

"திக்கற்றவருக்கு அங்குண்டு விஸ்வரூப தரிசனம்" என்று சொல்லுவது போல முத்துஸ்வாமி அய்யருக்கு ஒரு மகா புருஷர் தோன்றி அபயப் பிரதானம் அளிக்கிறார். "பயித்தியக்காரன். குழந்தை. ஒன்றும் தெரியவில்லை. அவசரப்படுவார்களா அப்பா, பொறுத்துக்கொள். மேலானதாய் நாம் இந்த உலகத்தில் செய்யக்கூடியது ஒன்று மில்லையடா; உண்டு என்று சொல்வதற்கும் நமக்கு அதிகாரமில்லையடா!" வேதாந்த பரிபாஷையிலே அய்யருக்கு ஆறுதல் அளிக்கிறார் சுவாமிகள் "....'பயப்படாதே, நல்ல நல்ல பூஜையைப் பண்ணியிருக்கிறாய். பகவான் உன்னிடத்தில் விசேஷக் கிருபை வைப்பார்....நமக்கு இனி மேல் இங்கே காரியம் இல்லை, போவோம் வா' என்று சுவாமிகள் ஆக்ஞாபித்து எழுந்து மண்டபத்தை விட்டு வெளியேறி முன்னே செல்ல முத்துஸ்வாமி அய்யர் 'இது வும் ஆச்சரியம்தான். நாம் ஒன்று நினைக்க தெய்வம் ஒன்று முடிக்கிறது. நமக்கு இனி எங்கே போனாலென்ன. கமலாம்பாள், ஐயோ இப்படியா மோசம் செய்தாய்? சிறு குளம், நாம் பிறந்ததும், வளர்ந்ததும்—போகட்டும். என்னைப்போல பாக்கியசாலிகள் உலகத்தில் கிடையாது அடி.....நானே ஆசிரமம் வாங்கிக்கொள்ளப் போகிறேன் என்று தெரியுமே. அதற்குள்ளேயா அவசரம்—சீ! இந்த

இழவு ஞாபகங்கள் இப்பொழுது ஏன் வருகின்றன? ஐயோ, நான் இன்று கண்ட காட்சி அடாடா! என்ன அற்புதம்! என்ன அற்புதம்! ஐயோ அதல்லவோ சுகம் பேரின்பம் என்று நன்றாய்ப் பேரிட்டார்கள். அந்தப் பாக்கியத்தை நாம் நித்தியமாய் அனுபவிப்போமானால்....' என்று மனதுக்குள் பாடிக்கொண்டே பின் சென்றார்."

"மனிதனுடைய சின்மய ஸ்வரூபத்திலும் ஞானானந்த வல்லமையிலும் நம்பிக்கையற்றவருக்கு இந்த (30-வது) அத்தியாயம் ருசிக்காது; கதையை மட்டும் கவனிப்பவருக்கு இது அத்தியாவசியமுமன்று" என்கிற ஒரு தைரியமான குறிப்புடன் ராஜமையர், குரு சிஷ்ய பாவ உறவையும் சிதம்பர ரகசியத்தையும், ஞான ஆனந்த அனுபவங்களையும் விளக்குகிறார். "சுவாமி அனுபவிக்கச் சக்தியையும் கொடுத்து, அவ்வனுபவம் சுலபத்தில் கிட்டாதபடி பல மான தடைகளையும் ஏற்படுத்தியிருக்கிறார். நாம் ஒரு மாமிசத் துண்டை நாய்க்குக் காட்டித் தூர வீசி எறிந்து விளையாடுவது போல சுவாமியும் நம்மைச் சோதனை செய்து விளையாடுகிறார். 'சரமெறிந்த பல்குனர்க்கு சரமீந்தான்.' அதாவது அர்ச்சுனனை வலிய சண்டைக்கிழுத்து அவ னோடு கை கலந்து சண்டை போட்டல்லவோ சுவாமி அவ னுக்குப் பாசுபத அஸ்திரம் கொடுத்தார்? அதுபோல நம்மைச் சோதனை செய்வதில் அவருக்கு வெகு திருப்தி. நாம் எல்லாம் அவருக்குக் குழந்தைகள். நம்மைத் துரத்த ஓடியும், நாம் துரத்த ஓடியும், நம்முடன் கொஞ்சிக் குலாவி யும், அடித்துக் கிள்ளியும், தாலாட்டியும், ஏமாற்றியும், மாற்றி மாற்றி அழப் பண்ணுவதும் சிரிக்கச் செய்வதுமே அவனுக்குத் தொழிலாய்விட்டது. நமக்கு விளையாடக் கொடுத்திருக்கிற சாமான்களைத்தான் பாருங்கள். மரங்கள், நதிகள், நட்சத்திரங்கள், மேகங்கள், ஆகாயம்! நமக்கென்ன

குறைவு? இவைகளை நாம் அனுபவிக்காவிட்டால் அது நம்முடைய குற்றம்" என்று சிந்திப்பதாகக் கூறுகிறார் ஆசிரியர்.

தத்துவ வேதாந்த விசாரம் எல்லாம் முத்துஸ்வாமி அய்யருக்குப் பொருந்தும். ஆனால் கணவனைப் பிரிந்து அழுவதல்லாது வேறு ஒன்றும் அறியாத பேதை கமலாம்பாளின் நிலை என்னவாயிற்று? "இவ்வுலகில் கடவுள் ஒருவரை நம்பலாமேயன்றி மனிதரில் யாரையும் நம்பக் கூடாது. எவ்வளவு உத்தமமான மனிதனானாலென்ன? அவனும் கடவுளுடைய ஆக்ஞைக்கு உட்பட்டவன்தானே? கடவுளுடைய கிருபையிருந்தால் நமக்கு ஒரு குறைவும் வராது. ஏதோ நாம் செய்த பாவம் அனுபவிக்கிறோம். பகவானுடைய சங்கல்பம் அப்படியிருக்குமானால் அதற்கு நாம் செய்யத் தக்கது என்ன? புருஷனைத் தியானித்தாலாவது பயனுண்டு. மற்ற ஸ்திரீகள் அனுபவியாதபடி நாம் சுகம் அனுபவித்தோமே அது போதாதா? ஆசைக்கு அளவில்லை என்பது சரியாகத்தான் இருக்கிறது. மேலும் இந்தத் துன்பமே கடவுளைப்பற்றி நினைக்கச் செய்வதினால் நமக்கு ஒரு பெரிய அனுகூலமாயிருக்கிறது....மனிதன் அனுபவிக்கிற சுகமெல்லாம் அவனுக்கே ஹித சத்துருவாயும், துக்கமெல்லாம் உண்மையான நன்மையாகவும் இருக்கிறது. வாழ்வு வந்துவிட்டால் மனிதனுக்கு உள்ள கண் காது எல்லாம் அடைத்துப் போகிறது....பகவானே! உன் இஷ்டப்படி நடத்து; நான் ஒன்றும் முணுமுணுப்பதில்லை......" என்று கமலாம்பாள் எண்ணுகிறாள்.

காசியிலே எல்லோரும் கூடுகின்றனர். முத்துஸ்வாமி அய்யருடைய காணாமற்போன குழந்தையும், அவர் பிரிந்த உறவினர்களும், இழந்துவிட்ட தனமும் மீண்டும் கிடைக்கின்றன. அவற்றை அங்கீகரிக்க அவர் தயங்கினார்.

பொருளைப்பற்றி அவர் குரு சொன்னார்: "அது உன் செல்வமல்ல. மற்றவர்களுக்காக அதை நீ பத்திரப்படுத்தும்படி கடவுள் உனக்கு அனுப்பியிருக்கிறார். அதை எடுத்து வை." என்று. எல்லோருடனும் இல்லற சன்னியாசியாக முத்துஸ்வாமி அய்யர் சிறுகுளம் திரும்புகிறார். தனக்கும் தன் குடும்பத்தாருக்கும் தீங்கு செய்தவர்களிடம்கூட அவர் விரோதம் பாராட்டவில்லை. "எனக்குத் தீங்கிழைக்க முன் வந்தவர்களால்தான் எனக்கு இப்பொழுது நான் அநுபவிக்கும் ப்ரம்மானந்தம் கிட்டிற்று" என்றார் அவர். "எதார்த்தத்திலே இவ்வுலக இன்பங்களைப்போல் நமக்கு விரோதிகள் வேறு யாரும், ஒன்றுமில்லை" கமலாம்பாளின் ராம பக்தி வைபவத்தையும், முத்துஸ்வாமி அய்யரின் நடன வைபவத்தையும் சொல்லவும் வேண்டுமோ என்று சொல்லி நாவலை முடிக்கிறார் ராஜமையர். நாவலின் முடிவிலே வேதாந்த, பக்தி பரமான சிந்தனைகள் சற்று அதிகமாகவே இருப்பது போலக் காணப்பட்டாலும், அந்தச் சிந்தனைகளும் விவாதங்களும் கமலாம்பாள் சரித்திரத்துக்கு ஓர் ஆழத்தையும் தருகின்றன என்பது மறுக்க முடியாத ஓர் உண்மை.

ஒரு தலைமுறையின் வாழ்க்கை வழிகளை நுணுக்கமாக, நல்ல அம்சங்கள் ஓங்கி நிற்க, குண சித்திரங்கள் என்றென்றும் நம் மனத்தைவிட்டு அகலாதிருக்கும்படியாக நாவலாசிரியர் ராஜமையர் ஒரு சிறப்பான கதையைத் தமிழர்களுக்குக் கமலாம்பாள் சரித்திரத்தில் சிருஷ்டித்துத் தந்துவிட்டார். பல விஷயங்களில் இந்த நாவலுக்கீடானதொரு நாவல் தமிழில் இனிமேல்தான் எழுதப்பட வேண்டும் என்று சொல்லவே எனக்குத் தோன்றுகிறது.

அ. மாதவையாவின்

# பத்மாவதி

## 1

**நா**மொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்கும் என்றும், கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டது என்றும், பிள்ளையார் பிடிக்கக் குரங்காகும் என்றும், குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக்கொள்வ துண்டு என்றும் வருணிப்பதில் கதாசிரியர்களுக்கு என்றுமே மோகமுண்டு, இப்படிப் பட்ட சம்பவமொன்று அ. மாதவையாவின் **பத்மாவதி சரித்திரத்திலே** வருகிறது.

சாவித்திரி என்பவள் அழகி. அவள் கணவன் வழியில்லை என்பது ஊர்ப் பிரசித்தம். நாகமையர் என்று ஒரு காமுகன் அவளை அடையத் திட்டமிட்டு அவளுக்கு 'உருக்கமாக' ஒரு கடிதம் எழுதினான். அந்தக் கடிதத்தை நல்ல பெண்ணான சாவித்திரி தன் சகோதரன் கோபாலனிடம் தந்துவிட்டாள். கோபாலனும் அவன் நண்பன் நாராயணனுமாகச் சேர்ந்து நாகமையரை 'ஆசை காட்டி அழைத்துச் செம்மையாக அடித்து, குடுமி மீசை முதலானவற்றை அகற்றி' அவமானப் படுத்திவிடுகிறார்கள்.

"தனக்குக் கடிதம் எழுதியவர் இன்னார் என்றாவது, நாகமையர் எங்கேயோ சுவர் ஏறி விழுந்து குடுமியறுபட்டார் என்று ஊரில் பரவும் பிரஸ்தாபத்துக்கும் தனக்கு வந்த கடிதத்துக்கும் ஏதாவது சம்பந்த முண்டென்றாவது சாவித்திரிக்குத் தெரியாது. நாகமையரோ சுரமாக இருப்

பதாக ஒரு வாரம் வரை வீட்டிலடைபட்டிருந்து, தலை மயிரைக் கழுத்தளவு வெட்டிவிடுவதுதான் சென்னப்பட்டணம் முதலிய இடங்களில் இப்பொழுது பரவும் நாகரிகம் என்று தானும் தலைமயிரை வெட்டிவிட்டதாகவும் சவ்வரிசிப் பாயசம் சாப்பிடும்போது ஒட்டிக்கொள்வதால் மேல் மீசையை எடுத்துவிட்டதாகவும் சொல்லிக்கொண்டு வெளியே வந்துவிட்டார். அவர் மனத்திற்கொண்ட அவமானம் இவ்வளவென்றில்லை; தக்க சமயம் பார்த்துப் பலாத்காரம் செய்தாயினும், தம்மை இப்பாடு படுத்திய சாவித்திரியின் கற்பை அழித்துவிட வேண்டுமென்று நினைத்தாரே யொழிய, தமது கெட்ட எண்ணத்துக்குத் தக்க தண்டனை கிடைத்ததென்று அவருக்குச் சிறிதும் புத்தி வரவில்லை. தாம் பட்ட அவமானம் முழுதும் சாவித்திரியின் ஏவலால் நடந்ததாகவே எண்ணினர். அவர் தம் மனைவியிடத்தில் முழு உண்மையையும் சொல்லாததனாலும் அவருக்குச் சாவித்திரி பேரிலுள்ள எண்ணங்கள் அந்த அம்மாளுக்குத் தெரியாதிருந்ததாலும் அவள் வழக்கம் போல சாவித்திரியிடன் நேசம் பாராட்டி வந்தாள். அன்றியும் முன்னிலும் அதிகமாகப் பழகுவதற்கு ஒரு காரணம் ஏற்பட்டிருந்தது; அதாவது நாகம்மையருடைய பெண்டாட்டியாகிய சாலாக்ஷியினுடைய ஒன்றுவிட்ட சித்தியினுடைய மாமனாருடைய அத்தான் மைத்துனனும், இப்பொழுது சாவித்திரியின் அப்பா சேஷையருக்கு மாமியாராக வந்திருக்கும் காமாட்சியம்மாளுடைய புக்ககத்து அத்தைக்கு மூத்தாளுடைய இரண்டுவிட்ட அம்மாஞ்சியும் சகலரென்று துலங்கிற்று. இவ்வளவு உறவு ஏற்படவே முந்திய சிநேகம் பலமடைந்தது.

"ஆனால் கோபாலன், நடந்த சங்கதிகளின் உண்மையைச் சாவித்திரிக்குச் சொல்லாதிருப்பினும் அவளுக்கும்

சாலாவுக்குமுள்ள நேசத்தைத் தான் சிந்துபூந்துறைக்குப் போவதற்கு முன்னமே குறுக்கிவிட வேண்டுமென்று ஆவலுடையவனுயிருந்தான். இதைப் பற்றி நாராயண னுடன் யோசித்துப் பார்த்தும் ஒரு வழியும் புலப்படவில்லை. கடைசியில் கோபாலன் மட்டும் தன் மனத்துக்குள் ஒரு முரட்டு யோசனை செய்து கொண்டு, நடந்த பின் வெளி யிடலாமென்று அதைப்பற்றி நாராயணனிடத்தில்கூடச் சொல்லாமலிருந்தான். அதாவது, 'சாலா தன் வீட்டுக்கு வரும்பொழுது தான் அவளைக் கையைப் பிடித்து இழுத்து விட்டால், அவள் ஓடி விடுவாள்; வெட்கத்தினுலும் பயத்தினுலும் தன் வீட்டுக்கு ஒரு நாளும் வரவே மாட்டாள்; ஒருவரிடமும் சொல்லவும் மாட்டாள்; சாவித் திரிக்கு மட்டும் ஏதாவது பொய்யான முகாந்திரத்தைச சொல்லிவிட்டு விலகிவிடுவாள்' என்று நினைத்தான். முதலில் அப்படிச் செய்வது ஒழுங்கீனமென்று அவன் மனத்தில் பட்டது. ஆனுல் நாகமையர் கெட்டவராயிருந்ததால் அவர் மனைவியை அவமானப் படுத்தலாமென்றும் இச்சங்கதியை நடந்த பின்பு அவர் அறிந்தாலும் தாம் சாவித்திரி பேரில் கொண்ட எண்ணங்களுக்குப் பதிலாகச் செய்யப்பட்டதாக நினைத்து புத்தியும் பயமும் அடைந்தொழுகுவார் என்றும் தன் மனத்தைச் சமாதானம் செய்துகொண்டான்.

"அதற்கேற்ப அன்று மாலையிலேயே அவனுக்குச் சமயம் கிடைத்தது. நாராயணன் மேடையில் வாசித்துக் கொண்டிருந்தான். சேஷையரும் சுந்தரமையரும் வேலை யாய் வெளியே போயிருந்தார்கள்; வீட்டிலுள்ள பெண் பிள்ளைகள் யாவரும், வாசற்கதவைத் தாளிடாமல் மூடி விட்டு, கொல்லைப்புறத்தில் ஏதோ வேலையாக இருந்தார் கள். கோபாலன் மட்டும் சாவித்திரியுடன் ஏதோ பேசுவ தற்காக மேடையிலிருந்து கீழே இறங்கி வந்தான். கீழே

முதல் நடைக்கட்டில் அவன் இறங்கியவுடன், இயல்பாகத் தலை பின்னிக்கொள்ள வந்த சாலா, வாசற் கதவைத் திறந்து, உள்ளே நுழைந்து, மறுபடியும் கதவை அடைத்து விட்டு, வீட்டுக்குப் போகும்படித் திரும்பினாள். அவள் முதலில், மேடையிலிருந்து கோபாலன் இறங்கியதைப் பார்க்கவில்லை. இருவரும் வீட்டினுள்ளே செல்லவேண்டிய தாயிருந்தாலும் சமவயதுள்ளவர்களாதலால் ஒருவரோ டொருவர் பேசுவது வழக்கமில்லையாகலினாலும், இருவரும் ஒரு நிமிஷம் வரை அங்கேயே திகைத்து நின்றார்கள். அதற்குள் கோபாலன் தன் எண்ணத்தை நிறைவேற்ற அதையே நல்ல சமயம் என்று நினைத்து, படார் படாரென்று பறையடிக்கும் தன் நெஞ்சத்தைத் திடப்படுத்திக்கொண்டு, கொஞ்சம் கிட்டப் போய் சாலா கையைப்பிடித்து, வாசலை திரிணின்றும் விலக்கி இழுத்தான். ஆகா! இதென்ன ஆச்சரியம்! கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டதுபோல் ஆயிற்று! சாலா, கோபாலன் நினைத்தபடி தன் கையைத் திமிறி இழுத்துக் கொண்டு கருடனைக் கண்ட சர்ப்பம் போல் பதறி ஓடாமல், கொஞ்சம் புன்சிரிப்புடன் அவன் அருகே வந்து மேலே சாய்ந்துகொண்டு நின்றாள். அவள் இப்படிச் செய்யவே கோபாலனுக்குப் புத்தி ஸ்தம்பித்து விட்டது; சரீரம், உச்சி முதல் உள்ளங்கால் வரை நடுங்கி மயிர்க்கூச்செறிந்து வேர்த்துவிட்டது; கால் தழன்று விழுந்து விடுவதுபோல, அயர்ச்சி உண்டாயிற்று; நாக்கு மேல் வாயுடன் ஆணியிட்டது போலிருந்தது; கண் மயங்கி விட்டது. கோபாலன் பேசாததைக் கண்டு, சாலா அவன் தோளில் கையைப் போட்டுக் கொண்டு, 'இங்கே யாராவது வந்து விடுவார்கள்! மேடைக்குப் போவோம் வா' என்றாள். கோபாலனுடைய நாக்கு கொஞ்சம் ஸ்வாதீனம் அடைந்து 'மேலே நாணு இருக்கான்' என்று சொல்லிற்று. உடனே

சாலா, 'அப்படியானால் இப்போது ஏன் கூப்பிட்டாய்? அப்புறம் பார்த்துக் கொள்வோம். மறந்துவிடாதே. அதோ வாசலில் யார் சத்தமோ கேட்கிறது; நான் போகி றேன்' என்று சொல்லி, கோபாலனுடைய இரண்டு கன்னங்களிலும் முத்தமிட்டுவிட்டு வீட்டுக்குள் விரை வாகப் போய்விட்டாள். ஒன்றும் தோன்றாமல் நின்ற இடத்திலேயே தான் எவ்வளவு நேரம் நின்றான் என்பது கோபாலனுக்குத் தெரியாது....

"நடந்த சங்கதிகளைக் கேட்டவுடன் நாராயணன் விழுந்து விழுந்து சிரித்தான்....பரிகாசம் பண்ணினான். கோபாலனுக்கோ ஒரு பக்கம் பயமும், ஒரு பக்கம் கோப மும் பொறுக்க முடியவில்லை. அவன் சற்று நேரத்துக்குப் பின், 'நாணு! சும்மா சிரியாதே! எனக்கு முன்னிலும் அதிக விசாரமாக இருக்கிறது. முன்பு நாகமையரை மட்டும் பயந்தோம். இப்போது அவரை விட அதிகமாக அவர் மனைவியை அஞ்சி ஓட வேண்டியதாயிருக்கிறது....'"

இந்தச் சம்பவத்தை நான் இங்கு இவ்வளவு விரிவாக எடுத்துச் சொன்னதற்குக் காரணம் இல்லாமலில்லை; மாதவையாவின் வசனத்துக்கும் கதையில் சம்பவப் போக் குக்கும் கருவுக்கும் உதாரணமாக இது அமைந்திருக்கிறது என்று சொன்னால் அது உண்மையேயாகும். விரசமாக இருக்கிறது என்று சொல்லக்கூடிய அளவுக்கு ஓடுகிற பகு திகள் பத்மாவதியின் சரித்திரத்திலே பல இருக்கின்றன. ஆனால் அதைப் பூரணமாக விரசமாக்கிவிடாமல் ஓரளவு லகான் இட்டு இழுத்து ஓட வைக்கிற முயற்சியிலே மாத வையா வெகுவாகப் பாடுபட்டு வெற்றியும் பெற்றிருக்கிறார் என்று தான் சொல்லவேண்டும்.

இந்தச் சம்பவத்தை உதாரணமாகக் கொண்டே ராஜமையருக்கும் மாதவையாவுக்கும் உள்ள வித்தியாசத்தை

யும் ஓரளவு விளக்கலாமென்று எனக்குத் தோன்றுகிறது. மாதவையாவின் வசனம் நேரான வசனம்; வசனத்தின் முழு வேகமும் பெற்றது; ராஜமையரின் வசனமோ கவிதையின் சுழிப்புகளும் உல்லாசங்களும் நிறைந்தது. விஷயத்தைப் பற்றியே மட்டிலும் கவனித்தால் மாதவையாவுக்கு உலகிலுள்ளவர்களில் பெரும் பகுதியினர் தவறு செய்கிறவர்கள், கெட்டவர்கள் என்பது போன்ற ஓர் அடிப்படையான எண்ணமிருந்தது தெளிவாகத் தெரிகிறது. ராஜமையர் அப்படி இல்லை; மனிதர்கள் சுபாவத்திலே நல்லவர்கள்; அவர்கள் கெட்டவர்களாவது சமய சந்தர்ப்பங்களால்; கெட்ட செய்கைகளுக்கான பலன்களை அவர்கள் இம்மையிலேயே அனுபவித்து விடுகிறார்கள் என்பது போன்ற ஒரு சித்தாந்த முடையவர் என்று தெரிகிறது.

சாலாவிடம் விஷமம் செய்யப் போய் ஏமாந்த கோபாலன் பிற்காலத்திலும் சாலாவிடமிருந்து தப்ப முடியவில்லை என்று ஆசிரியர் மாதவையா விவரித்திருப்பது திருப்திகரமாகவும், மனோதத்துவ விவரணப் போக்குக்கு ஒத்ததாகவும் இருக்கிறது. ஆனால் அதன் பின்னணியான மனோதத்துவத்தை ஆசிரியர் வெளியிட்டு ஆராயவில்லை. மேலே சொன்ன சம்பவம் நடந்தபோது கோபாலன் பள்ளி மாணவன். பின்னர் கல்யாணமாகி ஒரு குழந்தை பிறந்து, மேல் படிப்பில் தேறாத சமயத்தில், மனைவியால் படிப்புக் கெடுகிறது என்று ஊருக்கு அனுப்பிவிட்டு, சாலாவை யாரென் றறியாது தேடிப்போய் அவளுக்கு அடிமையாகி விடுகிறான். இதில் ஏதோ ஓர் இயற்கை நியதி ஆட்சி செலுத்துகிறமாதிரி வாசகர்களுக்குத் தோன்றுவதில் தவறில்லை. ஆசிரியர் கதையைக் கையாண்ட நேர்த்திக்கு இது சிறப்பானதொரு உதாரணமாகும்.

இந்தச் சாலா சம்பவத்தை ஒட்டியே ஆசிரியர் மாதவையா தஞ்சாவூர் ஜில்லாவைப் பற்றிப் பொதுவாகக் கொண்டிருந்த தப்பபிப்பிராயங்களையும் பார்க்கலாம் என்று தோன்றுகிறது. "கழுகுமலைச் சந்தையில் மாடுகள் பிடிப்பதுபோல், தஞ்சாவூர் ஜில்லாவில் ஏராளமான பெண்களைப் பிடிக்கலாமென்று தமக்குத் தப்புச் சொன்ன காசிவாசி ஐயாசாமி வாத்தியாரை மட்டும் கூடக் கூட்டிக் கொண்டு, தம் கலியாணத்தின் பொருட்டு வடக்கே தஞ்சாவூர் ஜில்லாவில் வஞ்சனூருக்கு புறப்பட்டுப் போனார்." இந்த மாப்பிள்ளைக்கு வயது அறுபது. பெண்ணாசையால் உந்தப் பட்ட இந்தப் பாண்டிய நாட்டு, திருநெல்வேலி ஜில்லாவாசி ரூபாய் இரண்டாயிரம் வரையில் கொடுத்து ஒரு பெண்ணைக் கட்டிக் கொண்டார். இளம் பெண்டாட்டி வரப் போகிறாள் என்று கனவு கண்டு கொண்டிருந்த கிழவருக்கு அவர் மனைவி இறந்து விட்டதாகத் தந்தி வருகிறது. செலவழித்த பணம் வீணாகிவிடக் கூடாதே, சொற்பச் செலவில் இறந்த பெண்ணின் சகோதரியையாவது கல்யாணம் செய்து கொண்டுவிடலாம் என்று மீண்டும் வஞ்சனூர் போனார். அவர் மனைவி இறக்கவில்லை யென்றும், தாலியை அகற்றி விட்டுச் சாமர்த்தியமாக அந்தப் பெண்ணுக்கு மறுமணம் நடத்தி, இன்னொரு இரண்டாயிரம் சம்பாதித்துவிட்டார் பெண்ணின் தகப்பனார் என்றும் தெரிகிறது. மாப்பிள்ளை செய்யக்கூடியது ஒன்றுமில்லை; பெண் சீமந்தத்துக்காகப் பிறந்த வீடு வந்திருக்கிறாள். காசிவாசி ஐயாசாமி வாத்தியார் மட்டும் கிழவரை அழைத்துப் போய் விடுகிறேன் என்று முன் பணமாக முன் முப்பதும், பின்னால் எழுபதும் பெண் வீட்டாரிடம் பெற்றுக் கொண்டு, கிழவருக்கு வேறு இடத்தில் மணம் செய்து வைத்தார், கிழவருக்கு இந்தத் திருமணத்தால் இன்னொரு இரண்டாயிரம் செலவு—ஒரு

மாமியாரும் மனைவியும் லாபம். அவருக்குக்கிடைத்த லாபத்தை விட, இவர்களால் வாத்தியார் ஐயாசாமி ஐயருக்குத்தான் அதிக லாபம் என்று நேரடியாகவே விளக்குகிறார் ஆசிரியர் மாதவையா. தன் சமூகத்துப் பழக்க வழக்கங்களில் நேர்மையற்றதையும் ஆபாசமானதையும் கண்டிப்பதற்கு ஏற்ற சம்பவங்களைத் திறம்படக் கையாண்டிருக்கிறார்.

## 2

அ. மாதவையா 1874-ல் பிறந்தவர். 1926-ல் இறந்தார். நன்றாகக் கல்வி கற்று ஆங்கிலத்திலும் தமிழிலும் நூல்கள் பலவற்றை எழுதியிருக்கிறார். அவர் ஆங்கிலத்தில் எழுதிய 'தில்லைக் கோவிந்தன்' எனும் நாவலை ஒருயர்ந்த நாவலாகக் கொள்ளவேண்டும். என்ன காரணத்தினாலோ அவர் அதைத் தமிழில் எழுதவில்லை. அவரே தமிழில் எழுதிய நூல்களில் பத்மாவதி சரித்திரத்தை முதன்மையாகச் சொல்லவேண்டும். அரசாங்க வேலையில் இருந்தவர் அவர். பல விஷயங்களைப் பற்றியும் தெளிவாகச் சிந்தித்துத் தன் சிந்தனையின் முடிவுகளைத் தன் நூல்களின் மூலம் பிறருக்கும் பகிர்ந்தளிக்க வேண்டும் என்கிற உன்னதமான நோக்கம் கொண்டவர். அவசியமான போதெல்லாம், கதைப் போக்கையும் தடைப்படுத்திக்கொண்டு, அவர் பிரசங்கமே செய்யத் தொடங்கி விடுவதுண்டு.

"வாலிபரைத் தாயினும் அருமையா யாதரித்து, அவர்களுக்கு அற்புதமான அறிவைப் புகட்டி, அவர்கள் யுக்தி புத்திகளைச் சன்மார்க்கத்தின் செலுத்துவதிலும் மேன்மையான தொழில் மனிதனுக்குக் கிடைத்தலரிது" என்று தொடங்கி மூன்றாவது அதிகாரத்திலே ஒரு நாலு பக்கங்

களுக்கும் அதிகமாகவே உபாத்தியாயார் தொழிலைப் பற்றிப் பிரசங்கம் செய்கிறார். அவர் பிரசங்கத்தை முடிக்கிற விதமும் கவனத்துக்குரியதே: "உடுக்கத் துணியும் உண்ணச் சோறுமில்லாத மூடனொருவன் ஒரு தொழிலு மறியானாயின் ஒரு பள்ளிக்கூடத்தை வைத்துப் பிழைக்கத் தலைப்படுகிறான். ஏழு வருஷமாகச் சிறைச் சாலையிலிருந்து விடுபட்டா னொருவன் பிழைக்க வழியின்றி ஒரு பள்ளிக்கூடம் வைத்ததை நாம் கண்டிருக்கிறோம். அந்தோ! இரவில் வீடுகளில் களவு செய்வதைத் தவிர அவன் வேறொன்றும் அறியானே! கன்னக்கோலைத் தவிர, பேனா எழுத்தாணி எடுத்தறியானே! அவன் அதி பாலிய ரான குழந்தைகளுக்கு என்ன கற்பிக்கப் போகிறான்! இலஞ்சம் வாங்கல் முதலிய புரட்டுகளுக்காக நீக்கப்பட்ட வர்களில் எத்தனை பேர்கள் பள்ளி ஆசிரியர்களாயிருக் கிறார்கள்! அநேகர் வக்கீல் ஆகிறார்கள்—அது போதாதா? குழந்தைகளையும் கெடுக்க வேண்டுமா? ஒன்றுக்கும் ஆகா தவன் உபாத்தியாயர் ஆகட்டும் என்பது வேதவாக்கா? இவ்விஷயத்தில் தக்க சீர்திருத்தம் உண்டாகும்வரை ஒரு தேசம் முன்னுக்கு வந்து விளங்குதலரிது" என்று பிர சங்கத்தை முடித்துக் கொண்டு, "இது நிற்க" என்று மீண்டும் கதை சொல்லத் தொடங்குகிறார் ஆசிரியர் மாத வையா.

அதே பாகத்தில் இருபத்தெட்டாவது அதிகாரத்தில், "ஆசிரியர் பெருமையைப் புகழ்ந்து எத்தொழிலிலும் அவரது தொழிலே மேம்பட்டதாகக் கூறினோம்....நாம் அப்பொழுது வைத்தியன் மகிமையைப் பற்றி நினைக்கவே இல்லை என்பதை ஒப்புக்கொள்கிறோம். சுவரை வைத்துக் கொண்டுதான் சித்திரம் எழுத வேண்டுமென்று ஒரு வசன முண்டு; அதுபோலவே நோயற்ற வாழ்வையுடைய

சரீரத்தை வைத்துக்கொண்டுதான் நாகரிகத்தையும் கல்விப் பயிற்சியையும் ஞானப் பெருக்கையும் பற்ற முயல வேண்டும். உலகத்திலே பிறப்பன யாவும் இறப்பது திண்ணமாயினும் உயிரோடிருக்கும்வரை நோயற்றச் சுகமாக இருக்க வேண்டுமென்பது யாரும் ஒப்புக்கொள்ளத் தக்கதே. ஆகவே அவ்வித வாழ்வுக்கு இன்றியமையாததாகிய வைத்தியம் எவ்விதத்திலும் மேம்பட்டதென்றும், அதில் தேர்ந்த பயிலும் வைத்தியனே பரோபகாரிகளுள் அரசனென்பதும் சொல்லாமலே விளங்கும்'' என்று தொடர்ந்து ஓர் இரண்டு பக்கங்களில் வைத்தியர்களைப் பற்றி ஒரு வசன காவியமே எழுதியிருக்கிறார் என்று சொல்வது மிகையல்ல.

இந்த மாதிரி ஆங்காங்கு பல விஷயங்களைப் பற்றிப் பிரசங்கங்கள் நிறைந்துள்ள பத்மாவதி சரித்திரத்தையே இன்றைய நிலையில் கல்வியின் அவசியத்தை வற்புறுத்த எழுதிய நாவல் என்று சொல்லலாம். ஆரம்பமுதல் முடிவு வரையில், இளம் பிள்ளைப் படிப்பு முதல் கல்லூரிப் படிப்பு வரையில் எல்லா அம்சங்களையும் பற்றி ஒரு வேகத்துடன் எழுதியிருக்கிறார் ஆசிரியர். முக்கியமாகப் பெண் கல்வியைப் பற்றித் தீவிரமாகச் சிந்தனைகளை ஓட்டியிருக்கிறார். இன்றைய லட்சியப் பெண்ணாகப் பத்மாவதியையும், நேற்றைய லட்சியங்களுடன் இன்றைய துடிப்புள்ளவளாகச் சாவித்திரியையும், பழமையின் முழுச் சின்னமாக சீதையம்மாளையும், பழசும் புதுசுமற்ற ஓர் இரண்டுங்கெட்டான் நிலையில் கல்யாணியையும் சிருஷ்டித்து நமக்கு அளித்திருக்கிறார் ஆசிரியர், பெண்களுக்கு ஆங்கிலப் படிப்பு மிக மிக அவசியம் என்று நாவலில் பல இடங்களில் தன் வாசகர்களுக்குப் போதிக்கிறார் ஆசிரியர். கதாபாத்திரங்கள் மூலமாக மட்டும் உபதேசம் செய்து திருப்தியடைந்த வேதநாயகம் பிள்ளை மாதிரி இருந்துவிடாமல், கதாசிரியர் வாயி

லாகவும் பல விஷயங்களை எடுத்து ஓதுகிறார் மாதவையா. ஏற்கனவே எடுத்துச் சொன்ன மாதிரி அவர் நேரடியாகப் பிரசங்கம் செய்து முடிந்து, "இது நிற்க" என்று சொல்லவும் தயங்கவில்லை.

விறுவிறுப்புடனேயே தொடங்கி நடக்கிறது கதை.

பத்மி என்கிற பத்மாவதிதான் நாவலின் கதாநாயகி. நாராயணனின் மாமா பெண். நாராயணனின் அம்மா சீதையம்மாள் ஒதுங்கிப் போனாலுங்கூட அவள் தம்பி மனைவி அவளைச் சண்டைக்கிழுக்கிறாள். ஆனால் பத்மாவதியும் நாராயணனும் மிகவும் ஒற்றுமை, பத்மாவதி ஒரு நாள் அவனை 'நீ யாரைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறாய்?' என்று கேட்டாள். 'எனக்குக் கல்யாணந்தான் பாக்கி,' என்று கண்ணீர் ததும்பச் சொன்னான் நாராயணன்.

"பத்மாவதி—நீ ஏன் விசாரப்படுகிறாய்! எங்களாத்தில் நிறையச் சாதமிருக்கு. வண்டி வண்டியாய் நெல் வரது. கலியாணத்துக் கென்ன? என்னைக் கலியாணம் பண்ணிக் கொள்ளேன்.

"நாராயணன் (சிரித்துக் கொண்டு அவளை முதுகில் தட்டிக்கொடுத்து)--உன்னையா? நீ துஷ்டத்தன மொன்றும் செய்யாமல் சரியாய்ப் படித்தால் உன்னைக் கல்யாணம் செய்து கொள்கிறேன்.

"பத்மாவதி—(வெகு ஆவலுடன்) ஆகட்டும். இனி மேல் ஒரு துஷ்டத்தனமும் செய்யவில்லை. நன்றாய் வாசிக்கிறேன். நான் உனக்குத்தான் வாழ்க்கைப் படுவேன்..."

அவள் அப்பா அம்மா அதற்குச் சம்மதிக்கமாட்டார்கள் என்று சொல்லிப் பார்த்தான் நாராயணன்.

"பத்மாவதி—அதெல்லாமில்லை. நான் உனக்கேதான் வாழ்க்கைப்படுவேன். நான் கரிக்கிட்டுவுக்கு வாழ்க்கைப் படமாட்டேன். நீ என்னையே கலியாணம் செய்து கொள்

நெருங்கிய நண்பர்களானார்கள். கோபாலனுடன் லீவுக்கு அவர்கள் ஊருக்குப் போனான் நாராயணன். அங்கே கோபாலனின் சகோதரி சாவித்திரியைப் பார்த்துப் பரவசமானான். அவளுக்கு படிப்பு ஏதாவதுண்டா என்று விசாரித்த நாராயணனுக்குத் துஷ்டன் சங்கரன், "'அவள் படித்த பள்ளிக்கூடத்தை காட்டுகிறேன் வா' என்று கூட்டிக்கொண்டு போய்த் தன் வீட்டுச் சமையற் கட்டிடத்தைக் காட்டி, 'இதுதான் சாவித்திரி பள்ளிக்கூடம். இதோ இருக்கும் சட்டி பானை பாத்திரங்கள்தாம் அவள் படித்த புஸ்தகங்கள்; நாம் சாப்பிடும் சாதம் அவளாகப் படித்துத் தேர்ந்து உண்டுபண்ணின கவி' என்று சொல்லிச் சிரித்தான்."

இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு நாராயணன் கல்வியைப்பற்றிப் பொதுவாகவும் பெண் கல்வி பற்றிக் குறிப்பாகவும் ஓர் உபந்நியாசமே நிகழ்த்தி விட்டான். "புருஷர்கள் மட்டும் படிக்க வேண்டுமென்றும் இல்லாவிட்டால் இழிவென்றும், பெண்டுகள் படியாமல் மூடத்தனமாக இருக்கலாமென்றும் நம்மவர்கள் எண்ணுகிறார்களே, இதென்ன நியாயம்!" என்று தொடங்கி வெளுத்துக் கட்டிவிட்டபின் பிரசங்க முடிவில் சாவித்திரி சந்தோஷத்துடனும் கொஞ்சம் நாணத்துடனும் சொன்னாள்: "நான் நாளைமுதல் வாசிக்கப்போகிறேன். யார் என்னவேணுமோ கேலி பண்ணட்டும். நாணு, எப்பொழுதாவது அடுத்த தடவை கோபுவோடு வரும்போது நான் எவ்வளவு வாசித்திருக்கிறேன் பார்" என்று சொன்னாள்.

பத்மாவதிக்கு அவள் அப்பா கல்யாணம் நிச்சயித்து விட்டார். அவள் அப்போது வேண்டாமென்று சொன்ன கரிக் கிட்டுவேதான் மாப்பிள்ளை. "பத்மாவதியின் மனத்திலுள்ள அந்தரங்க எண்ணங்களை இப்பொழுதும் கூட

யாரும் கவனிப்பாரில்லை. ஆனால் அவள் கைகளுக்கு மரு தோன்றிவிட்டு, அவளைக் குஞ்சம், சரக்குடி, தாழம்பூ, ஜடை நாகம், சந்திர பிறை, சூரிய பிறை, கடலைசரம், ஜப மாலை, பவுன் மாலை, உட்கழுத்து பணி, கண்டசரம், பவள மாலை, காரை, சந்திர முருகு, கேர்வாளி, மாட்டி, குருகு, பொன்னோலை, குண்டலம், பில்லக்கு, தளுக்கு, மூக்குத்தி, வளையல், மாட்டில், ஆடா கொலுசு, வங்கி, ஒட்டியாணம், பாடகம், பாதசரம், கொலுசு, மிஞ்சி, மெட்டி முதலிய சொந்தமும் இரவலுமான நகைகளால் சிங்காரித்து, அவள் நடக்கும்பொழுதெல்லாம் சில நகைகள் ஐயோ ஐயோ என்றும், சில நகைகள் பாவம் பாவம் என்றும், சில நகைகள் வேண்டாம் வேண்டாம் என்றும், சில நகைகள் தோஷம் தோஷம் என்றும், இன்னும் சில நகைகள் வீண் வீண் என்றும் இவ்வண்ணமாய் அவள் மனத்தையும் உண்மையு மறிந்து முறையிடுவன போல் நகைகளெல்லாம் ஒலிக்க, அங்கும் இங்கும் கல்யாணப் பெண்ணாக, இருபது முழ நீளமும், இரண்டு முழ அகலமும் இரண்டேகால் துலாம் கனமுள்ளதாயும், வேர்வையைத் தவிர வேறு தண்ணீரைக் கண்டிராததாயுமுள்ள ஒரு புடவையை அவளுக் குடுத்தி உலாவும்படி செய்தார்கள்." ஆனால் அந்தக் கல்யாணம் நடக்கவில்லை. மணப் பிள்ளை கிட்டு மணமாவதற்கு முன் மரணமடைந்துவிட்டான்.

ஆசிரியர் மாதவையா இந்த நாவலில் பிரமாதமான சிக்கல்கள் எதையும் உண்டாக்கி அவிழ்த்துவிடவில்லை. கூடியவரையில் நேரான ஒரு கதையையே கோவையாகத் தொடுத்துச் சொல்லிக்கொண்டு போகிறார். ஒரு தலைமுறையின் வாழ்க்கை வழிகளையும் பழக்க வழக்கங்களையும் நல்லது பொல்லாததுகளையும் ஓரளவு படம் பிடித்துக் காட்ட முயன்றிருக்கிறார். இந்த விஷயத்தில் அவர் காலத்

திய நாவலாசிரியர்களில் யாரையும்விட அவர் வெற்றி பெற்றிருக்கிறார் என்றே சொல்லவேண்டும். வேதநாயகம் பிள்ளையோ, ராஜமையரோ வாழ்க்கை வழிகள் பூராவையும் சொல்லிவிடவேண்டுமென்று முயலவில்லை. மாதவையா வுக்கு மட்டும்தான், இந்த 'இலக்கியப்பேராசை' இருந்தது.

## 3

ஒரு தலைமுறையில் ஒரு பகுதியினரின் ஆசைகள், ஏக்கங்கள், நோக்குகள் இவற்றை உண்மையுடன் படம் பிடித்துக் காட்டியுள்ள பெருமை மாதவையாவினுடையது. இந்தப் படம் பிடித்துக் காட்டும் காரியத்தை 'ரியாலிஸம்' என்று சொல்லுகிற ஒரு தத்ரூப வேகத்துடன் அவர் காட்டியிருக்கிறார்.

கோபாலனும் நாராயணனும் ஒரு விடுமுறைக்குக் கோபாலன் வீட்டிற்கு வந்திருந்தபோது முன்னர் கூறிய சாலா சம்பவம் நடந்தது. இதற்குள் கோபாலனுடைய தந்தை அறுபது வயதில் கல்யாணம் செய்துகொள்ள ஆசைப்பட்டு ஏற்பாடுகள் செய்வதைக் கண்ட கோபால னின் தம்பி சங்கு, தனக்குக் கல்யாணம் செய்துவைக்க ஏற்பாடுகள் செய்யாதிருப்பது கண்டு கோபித்துக்கொண்டு. ஓடிப்போய்க் கிறிஸ்தவர்களுடன் சேர்ந்துகொள்ள முயற் சிக்கிறான். ஆனால் அவனைப் பலவந்தமாக மீட்டுக்கொண்டு வந்துவிடுகிறார்கள். ஆனால் அவன் மீண்டும் ஓடிவிடுகிறான். நாவலின் கடைசி அத்தியாயங்களில் பத்மாவதிக்குத் தீங்கி ழைப்பதற்காகவே கூத்தாடியாக மீண்டும் வருகிறான் இந்தச் சங்கு.

நாராயணன் இப்பொழுது பத்மாவதியைக் கல்யாணம் செய்துகொள்ள யாரும் தடையில்லை. கல்யாணம் அதிக அமர்க்களமில்லாமல் நடந்தது. கோபாலன், நாராயணன்

இருவரும் அவர்களுடன் கல்யாணியும், பத்மாவதியும் சாவித்திரியைத் துணைகொண்டு வசித்துவந்தனர். சாவித்திரிக்குக் கணவன் நேராக இல்லாதது மட்டுமில்லை; தம்பியார் இரண்டாந்தாரம் மணம் செய்துகொண்டு மாமியாரையும் அழைத்துக்கொண்டு வீட்டிற்கு வந்த பிறகு அங்கு அவளால் இருக்க முடியவேயில்லை. இந்த மூன்று பெண்களின் குணநிசயங்களிலுள்ள வித்தியாசங்களை வாசகர்கள் கவனிக்காதிருந்துவிடப்போகிறார்களே என்று ஆசிரியர் மாதவையா ஓர் அத்தியாயத்தில் கோவையாக எடுத்துச் சொல்லுகிறார். "இன்னும் குழந்தைப் பருவம் நீங்காத பத்மாவதியோ, நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக விருத்தியடைந்துகொண்டே வந்தாள். அவளிடத்தில் மூவரினும் விளையாட்டுத் தன்மை இயல்பாகவே அதிகம்; ஆனால் எக்குணத்துக்கும் மேலாக ஒரு குணம் விளங்கிற்று; எப்பாடுபட்டாயினும் தன் கணவன் மனத்துக் கிசைய நடந்து, அவனால் மெச்சப்பட்டு, அவன் காதலை அடிமைகொள்ள வேண்டுமென்ற ஆவலினளாயிருந்தாள். அவ்விஷயத்தில் மட்டும் மெய் வருத்தம் பாராள்! பசிநோக்காள்! கண் உறங்காள்! எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளாள்! அவமதிப்பும் பாராள்!...பத்மாவதியே அதிக பாக்கியவதி...."

தன் மனைவியின் தம்பி சந்துருவைத் தேடவென்று கிளம்பிச் சென்ற சாவித்திரியின் கணவன் எங்கேயோ மலையாள தேசத்தில் ஒரு பெண்ணுடன் இருந்துவிட்டுக் கைக்காசு செலவழிந்த பின் வந்து சேர்ந்தார். வந்த அன்றே கோபாலன், நாராயணன் இருவரையும் அழைத்துக்கொண்டு, சாவித்திரியைப் பொருட்படுத்தாமல், நாடகம் பார்க்கப் போனார். "ஆயிரத்து எண்ணூற்றுத் தொண்ணூற்றோரா மாண்டு ஆடி மாதம் பன்னிரண்டாம் தேதி திங்கட்கிழமை

ஒன்றாவது திருநெல்வேலி வடக்குக் கோபுரவாயிலில் நரசிங்க ராயர் நாடகக் கொட்டகை தீப்பட்டதும், அதிலுண்டான உயிர்ச் சேதமும் உலகறிந்த விஷயமே.” இந்த நாடகக் கொட்டகைத் தீயில் சாவித்திரியின் கணவன் வெந்து மடிந்தார். கோபாலனுக்கும் நாராயணனுக்கும் அகப்பட்ட தீப்புண்கள்; கோபாலனுக்கு உயிரே போய்விடும் போல இருந்தது. ஆனால் விகாரமான தழும்புகளுடன் பிழைத்துக்கொண்டான். ‘ஜாதி வழக்கப்படி சாவித்திரியை அலங்கோலம்” செய்ததை எல்லாம் உருக்கமாக விவரித்துள்ளார் ஆசிரியர் மாதவையா. இந்த நாடகத் தீயால் ஏற்பட்ட நன்மை என்னவென்றால் சாவித்திரியைத் துன்புறுத்தக் கருதிக்கொண்டிருந்த நாகையரும் அதில் இறந்துவிட்டதுதான்.

பள்ளிப் படிப்பை முடித்துக்கொண்டு மேல்படிப்புப் படிக்கச் சென்னைக்கு வந்து சேர்ந்தார்கள் நண்பர்கள் இருவரும். இதுவரை சொல்லிவந்த சம்பவங்கள் அத்தனையும் நம் கதாநாயகனுக்குப் பதினாறு வயதாகுமுன் நடந்தது என்று எண்ணும்போது சற்று வியப்பாகத்தான் இருக்கிறது. ஆனால் அதில் அசம்பாவிதம் என்று சொல்ல ஒன்றுமில்லை. ஆசிரியர் சென்னைமாபுரியைத் தன் வாசகர்களுக்குச் சொல்லாமல் சொல்லி அறிமுகம் செய்து வைக்கிறார்: “ஊனும் உயிரும் உணர்வும் போல இப்பிரபஞ்சத்தின் உள்ளும் புறமும் வியாபித்திருக்கும் பரம்பொருளின் தன்மையை ஞானக் கண்களாற் கண்டுணர்ந்தவர்களுக்கு ஒன்றும் சொல்ல வேண்டுவதில்லையென்றும், அவ்வாறு கண்டறியாதார்க்கு வாயால் எவ்வளவு சொல்லினும் மிகப் பயன்படாதென்றும் எம் ஆசிரியரில் ஒருவர் கூறுவதுண்டு. சென்னைபுரியின் அதிசயங்களையும் விநோதக் காட்சிகளையும் பற்றி இதை வாசிப்போருக்கு நாம் அதேவிதமாகத்தான்

கூறக்கூடும். அன்றியும், சிறு பொருளுக்கு நெடுவழி செலுத்தும் ரெயில் பாதைகள் எங்கும் பரவப்பெற்ற தமிழ் நாட்டுவாசிகளிற் பெரும்பாலாரும் இவ்விராசாங்கத் தலைநகரை நேரிற் சென்று பார்த்திருப்பார்கள்; ஆகலின் அந்நகரைக் குறித்துக் கதை நிகழ்ச்சியில் வேண்டியபொழுது விவரித்தலே பொருந்தும்" என்று பின்னர் விவரிக்க இடம் வைத்துக்கொண்டு கதையை நடத்துகிறார் ஆசிரியர்.

மில்லர் ஸ்கூல் எனும் கிறிஸ்டியன் காலேஜ் பற்றியும், டாக்டர் மில்லர் பற்றியும் சிறப்பாக ஐந்தாறு பக்கங்கள் எழுதியிருக்கிறார் மாதவையா.

இப்போது சென்னையில் சீதையம்மாளும் உடன் இருக்கிறாள் என்பதைத் தவிர அவர்கள் வாழ்க்கையில் எவ்வித வித்தியாசமும் இல்லை. படிப்பும் இன்பமுமாகக் காலம் செல்லுகிறது. ஒரு விடுமுறைக்கு, கோபாலன் எல்லோருடனும் திருக்குற்றாலத்தில் தங்கியது விவரிக்கப் படுகிறது. கோபாலன் பட்டணம் திரும்பியபொழுது, படிப்புக்கு இடைஞ்சலாக இருக்கிறது என்று தன் மனைவியை அவள் பிறந்தகத்திலே விட்டுவிட்டு வந்தான். பத்மாவதி பட்டணத்துக்கு வந்தாள். கோபாலனும் நாராயணனும் ஒருநாள் மீண்டும் நாடகம் பார்க்கப் போனார்கள்.

இதனால் மறுபடியும் கெடுதல் வரும் என்று பத்மாவதி தடுத்தும் நாராயணன் கேட்கவில்லை. நாடகத்தில் வீட்டை விட்டு ஓடிப் போன கோபாலன் தம்பி சங்குவைக் கண்டு வீட்டுக்கு அழைத்து வந்தார்கள். சங்கு இப்போது "அவுட்டுப் புலி டால் ஜோடி ஸாபாஷ் சங்கர ஐயர்" என்ற விருது கீர்த்திகளுடன் விளங்கினான். தன் சுய சரித்திரத்தை விருப்புடன் சொல்லிவிட்டு அவன் அதற்கு முத்தாய்ப்பு

வைத்த மாதிரி சொன்னான்! "முன் போலக் கல்யாணப் பைத்தியம் எனக்கு இப்போது கிடையாது. ஊரெல்லாம் பெண்டாட்டியாய் வைத்துக் கொள்வதை விட்டு விட்டு, ஒருத்தியைக் கட்டிக் கொண்டு தொட்டு, நடுக் கட்டையிலே கிடத்து மட்டும் கவலை தானே என்றபடி, குழந்தைகளும் குட்டிகளும் காச்சுப்பீச்சு என்று கத்த எந்த முட்டாள் கஷ்டப்படுவான்?" தன் தகப்பனார் மேல் வியாஜ்யம் தொடுத்துச் சொத்தில் பங்கு கேட்கப்போவதாகவும் உத் தேசம் என்றான்.

"சங்குவின் நடவடிக்கைகளிலும் பேச்சிலும் ஒருவித மதமதப்பும், சிஷ்டாசார விரோதமும், காமாதுரமான கருத்துக்களும் மேலளாவித் தொனித்தன. அவனுக்கு இயற்கையாய் வாய்த்திருந்த துன்மார்க்க குணத்தை, நாடகக்காரர், சூதாடிகள், பாடகர்கள் முதலிய விட புருஷரோடும், பொதுப் பெண்டிரோடும் அடக்கமின்றிக் கூடிக் குலாவி அவன் செய்த சகவாஸம் பலப்படுத்தி அதிகப்படுத்தியிருந்தது. யாரையும் எவ்விஷயத்தையும் பற்றி அற்பமாயும் அவதூறாயும் பேசுவதும், எந்த ஸ்திரீயையும் முகமெடுத்து வெட்கமின்றி வெறித்துப் பார்ப்பதும், துன்மார்க்கமாய்ப் பேசுவதும் அவனுக்கு வழக்கமாய்விட்டன.' இந்தச் சங்கு நமது கதாநாயகி பத்மாவதியைத் தொந்தரவு செய்தான். பிரியாத கோபாலனும் நாணுவும், கோபாலன் தம்பி சங்கு காரணமாகப் பிரிந்து வாழ நேரிட்டது. வஞ்சம் தீர்த்துக்கொள்கிற மனத்துடன் சங்கு தன் அண்ணன் கோபாலன் சாலாவுக்கு எழுதிய ஒரு காதல் கடிதத்தைப் பத்மாவதிக்கு எழுதியதாகச் செய்து நாராயணன் மனத்தில் சந்தேக விதையை விதைத்தான். இன்ப வாழ்வு பாழ்பட்டது. அப்போது அவள் கர்ப்பமாகவும் இருந்தாள். ஒரு நாள் சீதையம்மாள் தனக்கு சாவு வந்து

விட்டது என்று தான் குறித்த நேரத்திலேயே செத்து விட்டாள்.

நாராயணனின் மாமா பலவிதமான சிரமங்களில் மாட்டிக் கொண்டு வரமுடியாதிருந்தார். பொறுப்பைப் பூராவும் ஏற்றுச் சமாளிப்பது நாராயணனுக்குச் சிரமமாகவே இருந்தது. பத்மாவதி டையரிக் குறிப்புகள் எழுதினாள். கணவனும் மனைவியும் நெருங்காமல் கஷ்டப்பட்டனர். பிறகு கோபாலன் மூலம் அந்தக் கடிதங்களின் உண்மையறிந்து பத்மாவதியைத் தான் சந்தேகித்ததன் அறியாமையை அறிந்து கொண்டான். "காதலிருவர் கருத்தொருமித்தனர்." தன் துயர் நீங்கியது போலவே தன் நண்பன் கோபாலனின் சாலா உறவும் நீங்கவேண்டுமென்று பாடுபட்டான் நாராயணன். கோபாலன் போய்த் தன் மனைவியை அழைத்து வந்தான்—சாலாவை மறந்து விடுவதாக அவன் கல்யாணிக்கு வாக்குக் கொடுத்துவிட்டான்.

நாராயணன் பி. ஏ. பரீட்சையில் முதல் வகுப்பில் ஒப்பேறினதும் அன்றித் தன் பள்ளிக்கூடப் பிரதம ஆசிரியரின் உதவியால், வேறொரு பள்ளிக்கூடத்தில் மாதம் எழுபது ரூபாய் சம்பளத்துக்கு உபாத்தியாயராக அமர்ந்து, அவ்வேலையிலிருந்து கொண்டே, எம் ஏ. பரீட்சைக்குப் போய், அதிலும் முதல் வகுப்பில் ஒப்பேறி இப்போது மாதம் நூற்றைம்பது ரூபாய் சம்பளத்துடன் வேலை பார்த்து வருகிறான். உபாத்தியாயரானதில் அவனுக்குள்ள பெருமைக்கும் சந்தோஷத்துக்கும் எல்லையில்லை. இப்போது அவனைத் தேகாப்பியாசப் பைத்தியம் பிடித்துக்கொண்டிருக்கிறது. பத்மாவதியையும் தேகாப்பியாசம் செய்யச் சொல்லி வற்புறுத்துகிறான். பெரியவளான கல்யாணியே இப்போது பத்மாவதியைப் பார்த்துத் திருந்திக் கொள்கிறாள். கோபாலனும் சிரமப்பட்டே பி. ஏ. பரீட்சை

ஒப்பேறி, எம். பி. ஸி. எம். என்ற பெரிய வைத்தியப் பரீக்ஷைகளைப் படித்துக் கொண்டிருக்கிறான். "அவனும் அவன் மனைவியும் மிகவும் மனவொற்றுமையுடன் சுகித்து வருகிறார்கள்." அவளும் படிக்கிறாள்—தமிழும் ஆங்கிலமும் படிக்கிறாள். தன் தம்பியின் குழந்தைகளைப் பார்த்துக் கொள்வது சாவித்திரிதான். சாவித்திரியும் கோபாலனும் அவர்கள் தகப்பனார் இறந்த பின் பெரும் பணக்காரர்களாகி விட்டார்கள்.

இப்படி முடிகிற பத்மாவதி சரித்திரத்திற்கு மாதவையா எழுதிய முகவுரையில் அவர் நாவல்களைப் பற்றிப் பொதுவாகக் கொண்டிருந்த அபிப்பிராயங்களில் சில காணக்கிடக்கின்றன. "உலக வாழ்க்கையைக் கண்ணாடி போற் பிரதிபலித்துப் பெரும்பாலும் அனுபவத்தோடொத்து நிகழும் கதைகளை நாவல் என்று மேல் நாட்டார் கூறுவர்....சரித்திர நாவல், ஒரு சமூக நாவல், மத சம்பந்தமான நாவல், மனோதத்துவ ஆராய்ச்சி நாவல் முதலிய பல பிரிவுகளுள்....சற்றேக்குறைய இருநூறு வருஷங்களாக ஏற்பட்டுக் கையாளப்படுகின்றன வெனினும், கடைசி ஐம்பது வருஷங்களாகவே மிகப் பரவிச் செழித்தோங்கியுள்ளன.

"வசன நூல்களே மிகவருமையான நமது தமிழ் பாஷையில், ஆங்கில நாவலுக்குச் சமமான கிரந்தங்கள் ஒன்றேனுமில்லை. யானறிந்த வரையில் அப் பெயர்க்குச் சிறிதேனும் தக்க கிரந்தங்கள் முதல் முதல் வெளிப் போந்தன, பிரேம கலாவதீயமும், பிரதாப முதலியார் சரித்திரமுமே. இவற்றில் முன்னது பல காரணங்களால் அப்பெயருக்கு நன்கேற்றது அன்று; பின்னது அதிகப் பயன்படாமை கருதி மேனாட்டாரால் சிறுபான்மையே கையாளப்படும் உரோமான்ஸ் வகுப்பைச் சார்ந்ததாகும்.

நாகரிகம் சிறந்த மேனாட்டிற் பெரும்பாலோரும் தம் மூளைக்குச் சிறந்த உணவாகக் கொண்டு அநுபவிக்கும் நாவல் என்ற கிரந்தப் பகுதியைத் தமிழிலும் நடைபெறச் செய்யக் கருதி, 'விவேக சிந்தாமணி' என்ற தமிழ்ப் பத்திரிகை வெளிப்பட்டபோது, அதன் முதற்றொகுதியில் சாவித்திரி சரித்திரம் என்று ஒரு நாவல் எழுதலானேன். சில காரணங்களால் அது முற்றுப்பெறவில்லை. அதன் பின்னர் ராஜமையர் அவர்கள் இயற்றிய கமலாம்பாள் சரித்திரம் வெளிப்போந்ததாகத் தெரிகிறது. பின்பு பத்மாவதி சரித்திரம் முதல் பாகம் வெளிவந்தது" என்று தமிழ் நாவல் இலக்கியச் சரித்திரத்தையும் சொல்லியிருக்கிறார் தம் முகவுரையில் ஆசிரியர் மாதவையா. "மகிழ்வூட்டலை முதற் கருத்தாகவும், அஃதுடன் நன்னெறியூட்டலை உட்கருத்தாகவும் கொண்டது" நாவல் என்று சொல்கிற மாதவையாவின் சித்தாந்தப்படி பார்த்தால் **பத்மாவதி சரித்திரம்** என்கிற தமிழில் மூன்றாவதாக வெளிவந்த நாவல் மிகவும் சிறந்த நாவல்களிலொன்று என்பது வெளிப்படை.

பண்டித நடேச சாஸ்திரியின்

# தீன தயாளு

## 1

"ஒரே ஒரு ஊரில் ஒரு புருஷன் பெண்ஜாதி என்று ஆயிரம் கதைகள் இதுவரையில் எழுதப்பட்டிருக்கின்றன" என்று பண்டித ச. ம. நடேச சாஸ்திரி தனது தீன தயாளுவை வெளியிட்டபோது, 1902 ல், முகவுரையில் எழுதுகிறார் "எனது தீனதயாளுதான் தமிழில் முதல் நாவல்" என்றும் கூறுகிறார். மற்ற முயற்சிகள் பற்றி அவருக்குத் தெரியவே தெரியாதோ என்னவோ! அல்லது தெரிந்திருந்தும் அவைகளெல்லாம் அப்படியொன்றும் முக்கியமானவையல்ல என்று எண்ணி இப்படி எழுதினாரோ! அது எப்படியாயினும், தமிழ் நாட்டில் வெளிவந்துள்ள நாவல்களில் நாலாவது ஸ்தானத்தை வகிக்கும் இந்தத் தீன தயாளு அந்த நாளுக்கு ஒரு புது முயற்சி. இந்தப் புது முயற்சியில் நடேச சாஸ்திரி, வேதநாயகம் பிள்ளையோ, ராஜமையரோ, மாதவையாவோ பெற்ற வெற்றி கூடப் பெறவில்லை. எனினும் முதல் தமிழ் நாவல்கள் வரிசையிலே இதுவும் முக்கியமானதோர் இடம் பெறவேண்டிய நாவல்.

பழமை மாறிப் புதுமை நம் வாழ்விலே இடம் பெறுவதை நாம் முன் கூறிய மூன்று ஆசிரியர்களும் மூன்று விதமாகக் கூறியிருக்கிறார்கள். இதே விஷயத்தைப் பண்டித நடேச சாஸ்திரி வேறு தனக்கே உரித்தான நடையில் தனி நோக்குடன் கூறுகிறார்.

உள்ளூர்ப் பரிகாரியின் திறமையிலே தீனதயாளுவுக் குச் சந்தேகம் வந்துவிடுகிறது. தீனதயாளுவின் தகப் பனார் மகாதேவர் நோய்வாய்ப்பட்டிருக்கிறார். பகாசுரகிரி எனும் மலை நகரில் சர்க்கார் உத்தியோகம் வகிக்கும் தீன தயாளு, "பகாசுரகிரியை விட்டுப் புறப்பட்டு நாற்பது மைலிறங்கி, கட்டை வண்டியில் செல்லவேண்டும். அப்புறம் ரயில் வண்டி ஏறி...இரண்டு நாள் பிரயாணம் கடந்துதான் ஊர் வந்து சேரலாம்....தான் சனைற்கால் வந்து சேர்ந்த இரவே அவன் பரிகாரி வேலாயுதத்திற்குச் சொல்லியனுப்பி அவனைச் சில கேள்விகள் கேட்டு, அவ னுக்கு வைத்தியம் அதிகமாகத் தெரியாதென்றும், ஏதோ தனது கையிலிருக்கும் பழைய மருந்துகளின் பெருமை யால் புகழ் பெற்றவன் என்றும் அறிந்துகொண்டான். மறுநாள் காலை வேங்கையூர் சென்று அவ்விடத்திலே டிரெஸ்ஸரை அழைத்து வந்தான்." (இப்போது நம் மிடையே டிரெஸ்ஸர் என்கிற அழகான பெயர் கூட மறைந்துவிட்டது.)

பழமைவாதிதான் என்றாலும் நடேச சாஸ்திரிகளுக் கும் உள்ளதை உள்ளபடியே சொல்லித் தீர்த்துவிட வேண்டும் என்று ஓர் அரிப்பு இருக்கிறது. அது காரண மாக அவர் வேங்கையூர் டிரஸ்ஸரை ஒரு சில பாராக்களில் விவரித்து நம் கண் முன் நிறுத்துகிறார்: "நமது நாட்டிலிருக் கும் டிரஸ்ஸர்கள் பெரும்பாலும் வெகு நல்லவர்கள். வேங்கையூர் டிரஸ்ஸர் மட்டும் இவ்வினத்தை விட்டுச் சிறிது விலகியிருந்தார். இவர் மனத்தில் தாம் அந்நாட் டையே வியாதியிலிருந்து நீக்க வந்த தன்வந்திரி என்ற எண்ணம். இந்த டிரஸ்ஸர் வேங்கையூருக்குப் பத்து வரு ஷங்களுக்கு முந்தி வந்தவர். அவர் வந்த இரண்டு வருஷத் திற்கெல்லாம் அவருக்குக் குஷ்டரோகம் வந்ததாம். என்

ளவோ தமக்குத் தெரிந்த மட்டும் இங்கிலீஷ் வைத்தியங்கள் பண்ணி, அதில் ஒன்றும் பலிக்காமல் நாட்டு வைத்தியம் அப்பியசித்து அதன் பிரகாரம் மூலிகைகள் புசித்து, பத்தியங்களிருந்து தமக்கு வந்த குஷ்டரோகத்தை நீக்கிக் கொண்டாராம். ஆகையால் அவர் தந்வந்திரியின் அவதாரம் என்பதற்கு ஆட்சேபமுண்டா என்று அவ்விடத்திய ஜனங்கள் சொல்வார்கள். இந்த ரோகம் அவருக்கு முதலில் வந்து, பின் அவரைவிட்டு நீங்கியது பொய்யோ, மெய்யோ, அது ஈசனுக்குத்தான் தெரியும். இக்காரணத்தால் அவருக்கு நாட்டு வைத்தியம் இங்கிலீஷ் வைத்தியம் இரண்டும் நன்றாக வரும் என்ற பெயர் மட்டும் வெகு பிரசித்தமாயிருந்தது. அப்பெயரால் அவர் வெகு தனவானாய்விட்டார் என்பது மட்டும் திண்ணம். யாராவது அவரிடம் சென்று அவசரம் என்று அழைத்தால் 100 ரூபாய்க்குக் குறையாமல் தமக்குச் சேரவேண்டிய கூலியைப் பேசிக்கொண்டு அதில் பாதி வாங்கிப் பெட்டியில் வைத்துப் பூட்டிவிட்டுத் தான் புறப்படுவார். தயை, தாட்சண்யம், கருணை என்ற குணங்கள் அவரிடம் எள்ளளவேனும் கிடையாது. சமயத்தில் பணம் கைப்பற்றிக்கொள்ளாவிட்டால் சமயம் கடந்து போன பிறகு ஒருவரும் தமக்குக் கொடுக்கமாட்டார்கள் என்பது அவருடைய சித்தாந்தம். வேங்கையூர் ஆஸ்பத்திரியை வெகு கிராமங்கள் நம்பியிருந்தபடியால், கிராமத்தார்களில் சிலர் இங்கிலீஷ் வைத்தியத்தில் நம்பிக்கையில்லாதவர்களாக இருப்பார்கள் என்ற எண்ணத்தால், இந்த டிரஸ்ஸர் தனக்கு நாட்டு வைத்தியம், யூனானி வைத்தியம் எல்லாம் ஸாங்கோபாங்கமாகத் தெரியும் என்று சொல்லி அம்முறைப்படியே மருந்து கொடுப்பதாக மருந்துகள் கொடுத்து, தமக்குச் சேரவேண்டிய கூலியைக் குறைவின்றிப் பெற்றுக்கொள்வார். டிரஸ்ஸர் உத்தியோ

கத்தின் கௌரவத்தால் இவருக்குப் பலவித அதிகாரங்கள் உண்டு. சிறு சிறு குழந்தைகள் தாங்கள் சில பரீக்ஷை களுக்குப் போகுமுன் அம்மை குத்தப்பட்ட சர்டிபிகேட் வாங்க வந்தால், அவர்களுக்கு அம்மையே போட்டிருந்த போதிலும் 1000 வடுக்கள் முகத்தில் காணப்பட்டபோதி லும் ஒவ்வொருவரிடமும் தவறாமல் 5 ரூபாய் கூலி வாங்கிக் கொண்டே ஸர்டிபிகேட் கொடுப்பார். சர்க்கார் மூலமாய் ஏதாவது அடிதடி கொலை முதலிய விபரங்களுக்கு இவர் போய்ப் பார்த்து சர்டிபிகேட் கொடுக்கும்படி உத்திரவு வந்திருந்தால் அதில் நியாயம் எப்படியிருந்த போதிலும் தமக்கு அதிகக் கூலி கொடுக்கப்பட்டவனுக்கு நல்ல சர்டிபி கேட் கொடுப்பார். ஏதாவது மொட்டை விண்ணப்பங்கள் போய் மேலான அதிகாரிகள் தன்னைப் பரிசோதிக்க வந்தால் வாய்க்கினிமையான தாதுபுஷ்டி லேகியங்கள் கூலி கேட்காமல் கொடுத்தும் மற்ற விதமாக நடந்து கொண்டும் அவர்கள் தன்னைப்பற்றி நல்ல அபிப்பிராயங்கொண்டு திரும்பும்படி செய்வார். இவர் சட்டப்படி யூனியன் சேர்மன். அந்த அதிகாரத்தால் எங்கு ஒருகால் ஜாஸ்தி வரி போட்டுவிடுவாரோ என்று ஜனங்கள் இவரிடம் பயந்து நடப்பார்கள். இவருக்கு மாதச் சம்பளம் 40 ரூபாயென்று லும் 10 வருஷங்களுக்குள் 40 ஆயிரம் சம்பாதித்திருந்தார் என்றால் வைத்தியத்தால் வரும் லாபமே லாபம்."

இந்த டிரஸ்ஸரின் வர்ணனையைப் படிக்கும்போது ஆசிரியர் யாரையோ மனத்தில் வைத்துக்கொண்டு எழுதியிக்கிறார் என்பது தெளிவாகவே தெரிகிறது. எனி னும், பொறுக்கியெடுத்து அழுத்திச் சொல்லும் விஷயங் கள் அவ்வளவாக இதமாக இல்லாததால் டிரஸ்ஸர் பூரண மாக உருவாகவில்லை ஆடுசாபட்டி அம்மையப்பப் பிள்ளையின் சிருஷ்டிகர்த்தாவான ராஜமையர் கையில் இந்தடிரஸ்ஸர்

அகப்பட்டிருந்தால் மறக்க முடியாத ஒரு பாத்திரமாக நாம் அவரை அறிந்து கொண்டிருக்கலாம். மாதவையாவானால் வைத்தியம் முதலியன பற்றியும், சர்க்கார் உத்தியோகங்கள் பற்றியும் ஓர் உபந்நியாசம் செய்து தீர்த்திருப்பார். வேதநாயகம் பிள்ளை நாட்டுக்கு நலம் தேட இந்த டிரஸ்ஸரையும் கொண்டு ஒரு கதை, ஒரு நீதி எல்லாம் நிர்மாணித்திருப்பார். இந்த மூன்று காரியங்களையும் ஒருங்கே செய்ய முயன்ற பண்டித நடேச சாஸ்திரியார் அவ்வளவாக வெற்றி பெறவில்லை என்று கூறத்தான்வேண்டும். ஆனால் இந்த மூன்று நோக்குகளுடைய அடிப்படை அம்சங்களும் இந்த வர்ணனையில் இருக்கவே செய்கின்றன என்றும் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

ஆசிரியர் நடேச சாஸ்திரியாரின் வர்ணனைகளுக்கேற்ற மாதிரியே தான் அமைந்திருக்கிறது அவர் தன் கதா பத்திரங்களுக்கு இட்டுள்ள பெயர்களும், ஏணிவாளன் என்று ஓர் உத்தியோகஸ்தர். அவருடைய அபிமான புத்திரனின் பெயர் இருக்ஷைவாயன். தீனதயாளுவின் தங்கை பெயர் பூந்தி. பூந்தியின் கணவன் பெயர் கையாந்தகரை. காந்தியின் பெண்களில் ஒருத்தியின் பெயர் மாந்தி. தீனதயாளு முதலில் வேலை பார்த்த இடத்தின் பெயர் பகாசுரகிரி என்று ஏற்கெனவே சொன்னோம். பிறகு அவன் புன்னைமா நகர் செல்கிறான், இப்படியாக விசித்திரமான பெயர்கள் பலவற்றை நாம் தீனதயாளுவில் பார்க்கிறோம். நேரில் கண்டவர்களையும், அறிந்தவர்களையும் அப்படி அப்படியே வர்ணிக்க ஆசிரியர் முயன்று, அம்முயற்சி வெற்றிபெற்றால் அவர்கள் கோபித்துக்கொள்ளப் போகிறார்களே என்று பெயர்களை மறைக்க இப்படி விசித்திரமான பெயர்கள் கண்டுபிடித்திருக்கிறார் என்று தோன்றுகிறது.

தகப்பனை விட்டுப் பிரிந்து வந்து [illegible] சர்க்கார் உத்தியோகங்களில் சின்ன உத்தியோகம் ஒன்றில் அடுபட்டிருக்கிறான் தீனதயாளு. தந்தி ஒன்று வருகிறது தீனதயாளுவுக்கு. அப்பிரதேசத்தில் வந்து சமைத்துப் போட்டுக் கொண்டிருக்கும் அவன் அத்தை தந்தியைக் கண்டு பதறுகிறாள். தீனதயாளுவின் தகப்பனுக்கு 'உடம்பு சரியாக இல்லை' என்று தந்தி வந்திருக்கிறது. தந்தியிலேயே ஜாதகப்படி மாரகதசை அவருக்கு இப்பொழுதில்லை என்று கண்டிருப்பதைக் கண்டு அத்தையும் மருமகனும் கொஞ்சம் ஆறுதலடைகிறார்கள். தகப்பனைப் பார்க்கப் போவதற்கு லீவு கிடைக்குமா, கிடைக்காது போய்விடுமா என்று அத்தையும் தீனதயாளுவும் விவாதிக்கிறார்கள்.

"தீனதயாளு—பழைய துரையிருந்தா லிப்பொழுதே கச்சேரிக்குக் கூடப் போகாமல் ஒரு கடிதம் எழுதிவிட்டுப் புறப்பட்டுவிடுவேன். இப்பொழுது வந்திருக்கிறவனோ புது துரை....இப்பொழுது ஆபீஸில் வருஷாந்திரக் கணக்கு முடிவு வேலை. இந்த மாதத்தில் எவ்விதமாய் எனக்கு உத்தரவு கொடுப்பானோ தெரியவில்லை.

"கந்தன் (அடுத்த வீட்டுக்காரன்)—இந்தச் சமயத்துக்கு ஒருவரும் உத்தரவு இல்லை என்று சொல்ல மாட்டார்கள். ஒருவருஷத்திற்கு ஒரு மாதம் உத்தரவு சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு உண்டு என்கிறார்களே, அப்படி உத்தரவு உனக்குக் கிடைக்காதா ?

"தீனதயாளு—சட்டத்தில் அப்படியிருக்கிறது நிச்சயந்தான். சட்டப்படி சரியாய் நடந்தால் மாதம் மும்மாரி பொழியாதா? உனக்கு லௌகீக நடவடிக்கை இன்னமும் தெரியாது. எப்படியிருந்தபோதிலும் யஜமான் தயவிருந்தாற்றான் எல்லாம் நடக்கும். எனக்கு நியாயமாய் 3 மாதத்

திய உத்தரவு வாங்கப் பாத்தியமிருக்கிறது. கொடுக்கிறவர் யார்? யஜமான் விசுவாஸமில்லாமல் 3 நாழிகைகூட உத்தரவு கிடைக்காதே.

"கந்தன்—உன்னைப்போல் பயந்தவனாக இருந்தால் ஒன்றுந்தான் கிடைக்காது. அந்த இரண்டெழுத்தை எனக்குக் கொடு. நான் இந்த ஊரைத் தென்வடக்காய் மாற்றிவிடுகிறேன். பி.ஏ. பி.ஏ. என்று எல்லோரும் புஸ்தகத்தைப் படித்துப் பரீக்ஷை கொடுத்துவிட்டால் மட்டுமாய்விட்டதா?

"தாயு (அத்தை)—நன்றாயிருக்கிறது. ஆபத்து சம்பத்து இல்லையா? உழைக்கிற காலமெல்லாம் நாய்போல் உழைத்துவிட்டு, தகப்பன் சாகக் கிடக்கிறான் என்றால் உத்தரவு கிடைக்காதா? நல்ல உத்தியோகம்.

"தீனதயாளு—உனக்கென்ன தெரியும் அத்தை. நீ உன் காரியத்தைப் பார்.

"தாயு—காரியத்தைத்தான் பார்க்கிறேன். காரியம் கிடக்கட்டும். எனக்கு ஒன்றும் தெரியவில்லையே! இப்பொழுது என்ன செய்வது?

"தீனதயாளு—எல்லாவற்றிற்கும் ஈசனிருக்கிறார். ஆபீஸ் போய்வருகிறேன்."

"புருஷன் பெண்ஜாதி கதை" எழுதுவதில்லை என்று தொடங்கிய ஆசிரியர் நடேச சாஸ்திரிகள், தனது கதாநாயகன் தீனதயாளுவுக்குக் கலியாணமாகிவிட்ட செய்தியைக் கூடச் சாவகாசமாக ஐந்தாவது அத்தியாயத்தில் தான் தெரிவிக்கிறார். கலியாணமானதுமட்டுமில்லை. மூன்று குழந்தைகளும் இருக்கின்றன. கதை ஆரம்பிக்கிற சமயத்தில் அவள் நாலாவது பிரசவத்திற்குத் தன் மாமனார் வீட்டுக்குச் சென்றிருக்கிறாள். மற்றப்படி தீனதயாளுவைப் பற்றி வாசகர்களுக்குச் சொல்லவேண்டியதை

யெல்லாம் ஆசிரியர் இரண்டாவது அத்தியாயத்திலே நேர்முகமாகவே சொல்லிவிடுகிறார்.

“தீனதயாளு என்பவன் 25, 26 வயதுள்ள ஒரு சிறுவன். இக் கலிகாலத்தில் தப்பிப் பிறந்தவன். அவனுடைய இளமைப் பருவத்தில் அவன் தன் தாயை இழந்து, தாயில்லாப் பிள்ளையாகவே வளர்ந்தவனானாலும், அவனுடைய நற்குணச் செய்கைகளால் அவனுடன் பழகிய ஒவ்வொரு பெண் பிள்ளைகளும் அவனுக்கு ஒரு தாயாக நின்று அவனை ஆதரித்து வந்தார்கள். இவர்களுள் தாய் என்ற தீனதயாளுவின் அத்தை இவனை 5-வது வயது முதல் தோளில் தூக்கியும், ஒரு நாளைக்கு 5 தடவை அன்னம் ஊட்டியும், பால் புகட்டியும் வளர்த்தவளாகையால் அவள் தீனதயாளுவிடம் விசேஷ விசுவாசம் பாராட்டி வந்தாள். தீனதயாளுவின் தகப்பனார் தனது மூத்த சம்ஸாரம் தப்பின பிறகு மற்றொரு பெண்ணை மணந்தார்....அவர் தனது அன்பு முழுமையையும் தீனதயாளுவிடம் வைத்திருந்தார்....தீனதயாளு வெகு வினயமுள்ளவன். தன் தகப்பனார் முன்னின்று ஒரு வார்த்தையாவது உரக்கப் பேசான். ஸதா புஸ்தகமும் கையுமாக இருப்பான். ஒரு நிமிஷமாவது வீண் காலம் போக்கான்.”

## 2

தகப்பனுக்கும் பிள்ளைக்கும் இருந்த உறவைத் தத்ரூபமாகக் காட்ட ஆசிரியர் வெகுவாக முயன்றிருக்கிறார் என்றுதான் சொல்லவேண்டும்.

“இவனுடைய தகப்பனாரும் இவனைக் குழந்தையென்றே அழைப்பது வழக்கம். வரப்போகிறான் கோடை லீவுக்கு என்று கடிதம் வந்துவிட்டால் இவன் தகப்ப

ளுக்கு அவர் தேகமே ஒரு சுற்றுப் பருத்துவிடும். தன் பந்துக்கள் இஷ்டமித்திரர் எல்லோரிடமும் அந்தக் கடிதத்தைக் காட்டுவார். கொல்லையில் பயிர்க் குழி போடும் வைத்திய பிள்ளைக்கு பிக்கவுண்டு. இளங்காய் வர்க்கங்களை குழந்தைக் கிருக்கட்டும் என்று நிறுத்தி வைப்பார். அவன வந்தாலும் தங்களையே நமஸ்காரம் பண்ணி நின்றால் அப மாதிரி செய்து அவன் எழுந்திருக்கும் முன்னம் அவனை ஒரு தடவை அவர் கட்டிக்கொள்வார். அப்படிச் செய்யும் பொழுதே இத்தனை நாள் அவனைத் தீராதபடி விட்டுப் பிரிந்திருந்ததற்காக அவர் கண்களிலானந்த பாஷ்பம் ததும்பும். அவர் வெகு கோழை மனமுள்ளவர். உடனே தன குமாரனைக் கொல்லைப்பக்கம் இட்டுக்கொண்டு போய், 'பார்த்தாயா குழந்தாய். நீ வரப்போகிறாய் என்று பத்து நாளாய் இந்த அவரைப் பந்தலில் ஒரு பூப் பிஞ்சுகூடப் பறியாமல் நிறுத்தி வைத்திருக்கிறேன். அடியே! யாரடி அங்கே? இந்தா, குழந்தைக்கு இன்று அவரைக்காய்ப் பறித்துப் பொரிச்சுக் குழம்பு பண்ணு. அந்த ஆள பொச்சைக்காய் கொண்டு வந்தானா? அவனிடம் நமது ஊரில் யார் கொல்லையிலிருந்தாலும் சரி, கொஞ்சம் கொண்டு வா என்று நேற்றைய தினம் சொல்லி யிருந்தேனே' என்பார்....தன் குழந்தை குடல் வாட ஒரு நிமிஷமாவது சகியார். தீனதயாளுவிடம் மாத்திரம் அவ்வளவு அதிக அன்பு என்று எண்ணவேண்டாம். எல்லா ரிடமும் அவர் அதேனிதம். மகாதேவர் கோழை நெஞ்சர் என்பது அந்த ஊரில் மாத்திரமின்றி, எங்கும் பிரஸித்தம்."

இப்படியெல்லாம் ஊரைச் சுற்றி வளைத்து முன்னுக்குப் பின் முரணாக, இலக்கண சுத்தத்துக்காகத் தமிழின் அழகான போக்கைக் கெடுத்து, பக்கம் பக்கமாக எழுதி யிருக்கிறார் பண்டித நடேச சாஸ்திரியார். ஆனால்

முழுசாகப் பார்க்கும்போது அவர் எதிர்பார்த்த அளவுக்கு விஷயம் தெரிந்துவிடுகிறது வாசகருக்கு என்பதை ஒப்புக் கொண்டே யாகவேண்டும். தீனதயாளு வந்து சேர்ந்த சமயம் மகாதேவர் "களைப்பு மேலிட்டு உறங்கும் சமயமாக விருந்தது." அவரை எழுப்புவதா வேண்டாமா என்று சுற்றி நின்றவர்களுடன் தீனதயாளு தர்க்கம் நடத்திக் கொண்டிருக்கிற சப்தம் கேட்டு அவர் தானாகவே விழித் துக்கொண்டுவிட்டார். உற்றாரும் உறவினரும் ஊராரும், விக்கிரமணியன் என்று பெயருடைய ஒருவனுள்பட வந்து போகிறார்கள். தகப்பனாரின் உடம்பு பற்றிச் சகலத்தையும் விசாரித்தறிந்துகொண்டு டிரஸ்ஸரைக்கூப்பிட்டுக் கொண்டு வந்து காட்டினான் தீனதயாளு. அவனுக்குத் தன் தகப்ப னாரிடம் இருந்த பக்தியையும் பிரியத்தையும் கண்டு பிரமித் துப்போய் வேங்கையூர் டிரஸ்ஸர்கூடத் தன் சுபாவம் மாறுகிறார்.

"வைத்தியர்—தாங்கள் சிறுவர் என்றாலும் உலகத் தில் நன்றாகப் பழகினவர்கள். உங்களுடைய முகம் எனக் குப் பார்க்கவே பிடிக்கவில்லை. இந்த விஷயத்தில் தாங்கள் வெகு ஏக்கம் கொண்டிருக்கிறீர்கள். உங்கள் நன்மைக் காகவே ஈசன் உங்கள் தந்தையைப் பிழைப்பிக்கவேண்டும். என்னைப்பற்றிப் பல பெயர்கள் பலவிதமாகத் தங்களிடம் சொல்லியிருக்கலாம். ஏனெனில் வைத்தியன் என்றிருந் தால் ஒருவன் எல்லாருக்கும் நல்லவனாக இருப்பது வெகு வருத்தம். நிற்க, தங்களைப்போலொருவரை நானிதுவரை யில் கண்டதேயில்லை. உங்கள் பணத்தில் எனக்கு ஒரு தூசுகூட வேண்டாம். என் மனப்பூர்வமாகச் சொல்லு கிறேன். நான் ஒருவித பிரயோஜனத்தையும் அபேக்ஷிக் காமலே என்னென்ன செய்யவேண்டுமோ அவ்வளவையும் செய்து தங்கள் தகப்பனாரைச் சௌக்கியப்படுத்தக் கட

மைப்பட்டவனுக இருக்கின்றேன். இரவோ பகலோ எந்தச் சமயமோ அந்தச் சமயத்தில் நான் தங்களுடன்கூட நின்று தங்கள் தந்தைக்கு வைத்தியம் பண்ணுகிறேன். இதைப் பற்றித் தாங்கள் சந்தேகமே படவேண்டாம்.... பெருஞ் சீரகவல்லியில் பெரிய டாக்டர் இருக்கின்றுர். அவருக்குத் தாங்கள் எனக்குக் கொடுக்கிற கூலியைக் கொடுத் தழைத்துவந்து காட்டினுல் என் மனத்திற்கு திருப்தியாக இருக்கும். கையாடுவதில் அவருக்கு அதிகப் பழக்கம். அவரே வந்து கையாடிவிட்டால் நான் அருகே நின்று எல்லாம் பார்த்துக்கொண்டு, அவரிடம் கேட்க வேண்டியவைகளைக் கேட்டுக்கொண்டு, வைத்தியத்தை நடத்துவேன். என் மனப்பூர்வமாய் நானிந்த விஷயமாகத் தங்களிடமிருந்து ஒன்றும் அபேக்ஷிக்கவில்லை. இன்றையத் தினமே கையாடலாம்!"

தான் வாங்கிக்கொண்ட பணத்தைத் திருப்பித் தரக் கூட டிரஸ்ஸர் தயாராக இருந்தார். ஆனுல், தீனதயாளு கொடுத்த பணத்தைத் திரும்பப் பெற மறுத்துவிட்டு, வேறு பணம் கொடுத்துப் பெருஞ் சீரகவல்லிப் பெரிய டாக்டரைக் கையாட—அதாவது புண்ணைக் கீறி ஆபரேஷன் செய்ய—அழைத்துவந்தான். தீனதயாளு அறிந்தும் அறியாமலும் நாட்டு வைத்தியம் மந்திர தந்திர முறைகள் எல்லாம் மகாதேவரைக் காப்பாற்றக் கையாளப் பட்டன. ஆனுல் ஒன்றும் பலிக்கவில்லை. முதல் பக்கத தில் தந்தி வந்தது உடம்பு சரியாக இல்லை என்று; ஐம்பதாவது பக்கத்தில் மகாதேவர் இறந்துபோனுர். அவர் சவம் எடுபடு முன்னரே சில கடன்காரர்கள் வந்து வழிமறித் தார்கள்—ஆனுல் தீனதயாளு தன் தகப்பனுரின் சொத்து சுதந்திரங்களைச் சொல்லி, தன் சர்க்கார் உத்தியோகத்தின் மேல் ஆணையிட்டுக் கடன்களைத் தீர்ப்பதாக வாக்களித்த

பிறகுதான் கடன்காரர்கள் தொல்லை தற்காலிகமாக ஒழிந்தது.

மகாதேவரின் இளைய சம்சாரம் வீட்டிலிருந்த சாமான்களைத் திருட்டுத்தனமாக அப்புறப்படுத்தித் தன் பிறந்த வீட்டுக்கு அனுப்பினாள். அதைப்பற்றித் தன் அத்தை குறை கூறியபோது தீனதயாளு அதைப் பாராட்டவில்லை. இருபதினாயிரம் ரூபாய் வரையில் கடனும் இருந்தது. எல்லாவற்றையும் சமாளிக்க, சிறுவனாக இருந்து திடீரென்று குடும்பத் தலைவனாகிவிட்ட தீனதயாளு வழி செய்தான். "இனித்தான் உனக்கு சாந்தியின் (சிறிய தாயாரின்) உண்மையான குணம் விளங்கும். ஜம்புநாதபுரத்தாள் வெகு சாது என்று நினைத்திருப்பதன் உண்மையை நீ காணலாம்" என்று அவனை எச்சரித்தாள் அவன் அத்தை. எது எப்படியானாலும் சேர்ந்த குடும்பமாக இருக்கவேண்டுமே தவிர பாகம் பிரித்துக்கொண்டு போய்விடக்கூடாது என்று அபிப்பிராயப்பட்டான் தீனதயாளு.

"தாயு—அப்பா, உன் பக்கில் ஈசன் இருக்கவேண்டும். உனக்கு இவ்வுலகமே தெரியாது. எல்லாரும் உன்னைப் போல் என்றிருக்கிறாய். இனி அதிகமாக நான் சொல்வானேன்? வெகு சடுதியில் உனக்கே எல்லாம் விளங்கும். குலத்தளவே ஆகுமாம் குணம் என்ற பழமொழிப்படி ஜம்புநாதபுரத்தாள் தனது குணத்தை வெகு சீக்கிரம் காட்டிவிடுவாள். காடு ஆறுவதற்கு முந்தி பாதி சாமான்களைத் தூக்கி ஊருக்கனுப்பினவள் எவ்வளவு கபடமுள்ளவள் என்பதை உனக்குள்ளேயே ஊகித்துக்கொள். இனிச் சேர்ந்திருப்பது என்பது ஒரு நாளும் நடவாத காரியம். அப்புறம் உன் சாமர்த்தியம்."

தீனதயாளுவின் சாமர்த்தியங்கள் ஒன்றன் பின் ஒன்றாக எல்லாச் சந்தர்ப்பங்களிலும் வெளியாகின்றன.

அவனுடைய சிறிய தாயார் சாந்தி சொன்ன குதூகலான குறும்பு மொழிகளைக்கூட யதார்த்தமாகவே ஏற்றுக் கொண்டு அவளிஷ்டப்படியே எல்லாவற்றையும் நடத்தி வைக்க அவன் முயற்சித்தான். சாந்தி அவனுடன் வந்திருக்க விரும்பவில்லை. "குழந்தாய், இனி அவர் காலஞ் சென்ற பின்பு எங்களையெல்லாம் காப்பாற்ற வேண்டிய யஜமானன் நீ. நீ என்ன சொன்னாலும், கேட்கவேண்டும். அவர்கள் காப்பாற்றினதுபோல் எங்களை ஒருவிதக் குறையு மின்றிக் காப்பாற்றுவாய். அதில் சிறிதேனும் சந்தேக மில்லை. ஆனால் அவர்கள் காடு இன்னும் ஆறவில்லையே! மேலும் ஒரு வருஷம் இவ்வூரை விட்டு நான் அப்புறம் இப் புறம் அசையமாட்டேன். ஏதோ சணற்கால் நாற்சந்தியில் என்னை நிற்கவைக்காமல் உட்காருவதற்கு இவ்வளவு நிழ லாவது வைத்தார்களே! அதில் நானிருக்கிறேன். நீ க்ஷேம மாய் உத்தியோகத்திற்குப் போய் வா. பகாசுரகிரி குளிர் நாடு என்கிறார்கள், அவ்விடம் விட்டு மாற்றிக்கொண்டு நமது தேசங்களுக்கு வரக்கூடாதா? போனவர்கள் தெய்வ மாகயிருந்து அவ்வளவு தூரம் சகாயம் செய்வார்களா?" என்றாள் சாந்தி—அவன் சிறிய தாயார். அவள் மகனை சங்குவையும் தன் குழந்தை குட்டிகளையும் மனைவியையும் அழைத்துக்கொண்டு பகாசுரகிரி போனான் தீனதயாளு.

"சணற்கால் செலவுக்கு அங்கு வந்த நெல் ஏராள மாகப் போதுமாகையால் அவன் பணமனுப்ப வேண்டு மென்பதே யில்லை. ஆனால் அவ்வளவு எளிதில் சாந்தி அவனை விடவில்லை. அவனிடம் பஞ்சைப் பாட்டுகள் எவ்வளவோ பாடி முக்கியமாக அத்தைக் கிழவிகளுடைய க்ஷேமத்துக்குத்தான் ஒருவித குறைவும் பண்ணக் கூடா தாகையால் அவர்களுடைய சம்ரக்ஷணைக்கென்று தீன தயாளு தனக்கு மாதந்தோறும் ரூபா 10 அனுப்ப

வேண்டும் என்று ஏற்பாடு செய்துகொண்டான். இவ்வாறு எல்லாவித திட்டங்களையும் செய்து முடித்து, தினம் சம்பு வுடன் பகாசுரகிரி வந்து சேர்ந்தான். தினத்தின் சம்பளம் 25 என்றால், இதில் 15 ரூபா அவன் செலவுக்கு அவ்வூரில் எவ்வாறு போதும்? அவன் தனது தந்தை காலத்தில் எவ்வளவுக் கெவ்வளவு சுகப்பட்டானோ அவ்வளவுக் கவ்வளவு அவர் மாண்ட காலம் முதல் அவன் கஷ்டப்பட லானான். ஆனாலவன் மனோதைரியமே தைரியம் என்று மட்டும் சொல்லக்கூடாது. தன்னுடைய கர்த்தரிடத்தில் அவன் வைத்திருந்த நம்பிக்கை என்று சொல்லலாம். தான் எல்லாவிதத்திலும் பரிசுத்தனாக இருக்கின்றவரையில் கடவுள் தன்னைக் கை விடமாட்டார் என்பது தீனதயாளுவின் முக்கியமான கொள்கை."

பழமையில் நம்பிக்கை வைத்து, பழைய மாதிரியே குடித்தனத்தை ஒரே குடும்பமாகச் செய்து வரத் தீன தயாளு படாத பாடும் படுகிறான். ஆசிரியரின் அனுதாபம் பூராவும் கதாநாயகனிடம் இருக்கிறது என்பது பக்கம் பக்கமாகத் தெளிவாகிறதே தவிர, அவன் இப்படி அரும் பாடு படுவது அனாவசியம் என்று அவர் ஒரு இடத்திலும் சொல்லவில்லை. இந்தக் காலத்தில் பலவிதமான சந்தர்ப்ப சூழ்நிலைகளால் பழைய வழிகள் சிரமமானவையாக மாறி விட்டன என்பது உண்மைதான் என்று வற்புறுத்து வதற்கே இந்த நாவலை ஆசிரியர் எழுதியிருக்கிறாரோ என்று வாசகர்களுக்கு நினைக்கத் தோன்றும்.

பல காரணங்களைச் சொல்லி, தீனதயாளுவைப் புண் படுத்திப் பற்றுப் பணத்தைக் கனி கனியாகத் தன் தங்கை புருஷனிடம் தருகிறாள் சாந்தி. அவன் தன்னை ஏமாற்றி ஏப்பம் விட்டுவிடுவான் என்கிற சந்தேகமே அவ ளுக்கு வரவில்லை. கண்ணெதிரில் நடப்பதைக்கூட அவள்

புறக்கணித்துவிட்டு, தீனதயாளுவை நம்பாமல் தங்கை புருஷனை நம்புகிறாள். இந்தத் தங்கை புருஷன் கையாந்தகரை ஒரு சமயம் தீனதயாளுவைக் காணப் பட்டணம் வருகிறான். பழமை அங்கு சிறிது நசித்து எல்லாம் நாகரிகமாக இருப்பதை அவன் குறைகூறுகிற பகுதி ரஸமாக இருக்கிறது.

"கையாந்தகரை—என்ன! இந்த ஊரில் என்ன அக்கிரமம்....பையன்கள் ஒருவருமே சந்தியாவந்தனம் பண்ணுகிறதில்லை. நம்மூர்ப் பையன் சுப்பராயன் அடுத்த தெருவில் சுக்கிராச்சாரி ஓட்டலில் சாப்பிடுகிறான். அவனைப் பார்க்கப் போனேன். போட்ட சட்டை கழற்றாமல் இலையில் வந்து எல்லாப் பையன்களுடனும் உட்காருகின்றான். நெற்றியில் விபூதி என்பதே கிடையாது. என்ன அக்கிரமம், என்ன அநியாயம்?...."

இதற்குத் தீனதயாளு சமாதானம் சொல்ல வேண்டியதாக இருக்கிறது. "பெரிய பட்டணங்களில் அப்படித்தான். அதனால் பிசகாக நீங்கள் எண்ண வேண்டாம். எல்லாரும் சிறு பையன்கள். இப்பொழுது அப்படி இருந்துவிட்டுக் கடைசியில் தாங்கள் வேலைகளில் செல்லும் காலத்தில் வெகு ஆசார சீலர்களாய்விடுவார்கள்." அப்படியும் விடாமல் கையாந்தகரை பேசவே தீனதயாளு சற்று அழுத்தமாகவே திருப்பிக்கொண்டான்: "பட்டணத்திலிருக்கும் நன்மை வெளியில் கிடையாது. இவ்விடத்தில் அடுத்த வீட்டுக்காரன் இன்னாரென்று நமக்குத் தெரியாது. அவனவன் வேலையை அவனவன் பார்த்துக்கொண்டு போவான். ஒவ்வொருவனும் ஒரு தொழிலில் சுறுசுறுப்பாகத் தன் காலத்தைக் கழிப்பான். பிறர் வீட்டுச் சமாசாரம் பட்டணத்தானுக்குத் தெரியவே தெரியாது. கிராமத்தில் சிலர் கழுத்தில் போட்டிருப்பது கௌரிசங்கர ருத்திராக்ஷம்தான். ஆனால் அவர்களில் சிலர் எத்தனை பேர்

களுடைய பணத்தை எடுத்துக்கொண்டு மோசம் பண்ணி யிருக்கிறார்கள்....கிராமங்களில் மேல் ஆசாரம் அதிகம்...."

வைராக்கியத்தையும் கழுத்தில் ருத்திராக்ஷம் அணிந் திருந்தான். "சாந்தியின் பொருளை அவளிடம் கொடுத் தீரா?" என்று தீனதயாளு கேட்டுவிடப் போகிறானே என்று பயந்து அவன் அடங்கிவிட்டான். இல்லாவிட்டால் அவனுக்குப் பட்டணத்தைப் பற்றிச் சொல்ல நிறையவே விஷயம் இருந்திருக்கும். தீனதயாளு சொல்லாமல் சொல்லி நிறைவேற்றிய காரியங்களில் இதுவும் ஒன்று. அவனுடைய குணாதிசயங்களிலே இதையும் ஆசிரியர் நடேச சாஸ்திரியார் நன்றாகவே சித்திரித்திருக்கிறார் என்றுதான் சொல்லவேண்டும்.

## 3

நேரான ஒரு கதையை மிகவும் நேர்த்தியாகவே நடத்திக்கொண்டு போகத்தான் ஆசிரியர் நடேச சாஸ்திரி யார் முயன்றிருக்கிறார். கதையில் சுவாரசியத்துக்காகவோ மற்ற எந்தக் காரணத்துக்காகவோ எவ்விதமான முடிச்சு சுருக்கும் இல்லை. வருகிற பாத்திரங்களைக்கூட அவசியம் நேரிடும்போதுதான் அறிமுகம் செய்து வைக்கிறார் ஆசிரி யர். உதாரணமாக நாம் நாவல் முடிகிற தறுவாயில்தான் தீனதயாளுவின் மனைவியின் பெயர் பனிமொழியாள் என்று அறிந்துகொள்கிறோம். இந்தக் காலத்து நாவல்கள் பலவற்றில் வரும் பெயர்களை நமக்கு ஞாபகம் ஊட்டுகிறது இல்லையா, பனிமொழியாள் என்கிற பெயர்?

"இவ்விருவருடைய தாம்பத்தியம் வெகு சிறப்பானது. பனிமொழியாளும் தீனதயாளுவும் குழந்தைப் பருவம் முதல் ஒரே வீட்டில் விளையாடி வளர்ந்து அதன் பிறகு இல் வாழ்க்கையில் அமர்ந்தவர்கள். வறுமை என்பது நீங்கலாக

அவ்விருவர் வாக்கியத்துக்கு ஒப்பான வாக்கியம் காண்ப தரிது, அவ்வறுமையும் அவ்வம்மணியின் குணங்களை மேலெடுத்துக் காட்டிற்று. வறுமை என்பது மனைவியின் குணத்தை அளந்து கண்டுபிடிக்கும் ஓர் அளவு கோல் போலாம். தன் புருஷன் படும் சிரமமெல்லாம் தனது சிரம மாக எண்ணி வீட்டில் தீனதயாளு கொண்டு வந்து போடு வதைச் சந்தோஷமாகப் பெற்றுக்கொண்டு முதலில் குழந்தைகள் வயிறு வாடாமல் அமுதளித்து மிகுந்ததைப் புருஷனுக்கிட்டு, தனக்கு இருக்குமோ இருக்காதோ இல்லையென்று வாய் திறவாமல் அவள் காலங் கழித்து வந்தாள். அவள் காலம் அதிகமாகக் குழந்தைகளைப் பெற்று அவைகளைப் பாதுகாப்பதிலேயே கழிந்துகொண் டிருந்தது." தன் கணவரின் சரித்திரத்தில் இடம் பெறவும் அவளுக்குப் பொழுதில்லைதான்!

உத்தம குணங்களுள்ள தன் கதாநாயகன் இப்படியே எப்பொழுதும் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்க விட்டு விடு வாரா கருணை மிகுந்த ஆசிரியர்? நல்ல காலம் பிறக்கிறது. கையாந்தகரையிடம் ஏமாந்த சாந்தி, தன் சொந்த மகன் சங்குவின் நடத்தையாலும், மனம் வருந்துகிறாள். எவ் வளவோ படாத பாடுகள் படுத்தியும் தன்னை ஒரு சொல் சொல்லாத தீனதயாளுவை எண்ணி அவள் வருந்துங் காலம் வருகிறது. கையாந்தகரையை அடித்து விரட்டுகிற வரைக்கும் நல்லவனாக இருந்த சங்கு, சொத்தெல்லாம் தன் சுவாதீனத்திற்கு வந்த பிறகு, தாய் சொன்னதையும் காதில் வாங்காமல் எல்லாவற்றையும் ஒரு 'சேர்மான'த் துக்கு எழுதித் தந்துவிடுகிறான். அவனைப் பெற்ற தாயான சாந்தியே, அவன் செய்த அக்கிரமங்களைச் சகிக்கமுடியாது 'எக்கேடும் கெட்டுப் போ! என் வயிற்றில் நீ பிறந்த போதிலும் நீ என் பிள்ளையல்ல! தெரியாதவிதமாய் என்

தீனதயாளுவை நான் வஞ்சித்தேன்! உன்னை நம்பி நான் வீண் பாவம் கட்டிக் கொண்டேன். திரும்பி நானவனிடம் சென்றால் அவன் என்னைக் கழுத்தைப் பிடித்துத் தள்ள மாட்டான். பனிமொழியாள் கையால் கஞ்சி குடித்தாலும் அது அமிருதத்துக்கு ஒப்பாம்' என்று வாய்விட்டுச் சந்திருவிடம் சொல்லிவிட்டுச் சென்று விட்டாள். சந்திருவுக்குப் புத்திசொல்லித் திருத்தி, பணமும் தந்து, தீனதயாளு, தாய்க்கும் பிள்ளைக்கும் சமரஸம் செய்து வைக்கிறான்.

சாந்தியின் மனம் மாறியவுடனேயே தெய்வமும் கண் திறந்தது. தீனதயாளுவில் கடைசி அத்தியாயத்தின் தலைப்பே 'தெய்வம் கண் திறந்தது' என்பதுதான்.

"பலவிதமாய் மேலதிகாரி ஏணிவாளன் தீனதயாளுவைப் பரிசோதித்துப் பார்த்தான். தனது சுறுசுறுப்பாலும் நடத்தையின் பலத்தாலும் அவ்வளவுக்கும் தீனதயாளு ஈடு கொடுத்து வந்தான். புன்னை நகரிலிருந்து 200 மைல் தூரத்தில் தெலுங்கு தேசத்தில் புதுவேர்க்காடு என்று ஒரு பட்டணமுண்டு. அது எப்பொழுதும் வெகு செழிப்பாக விருந்த பட்டணம். ஏதோ காரணத்தால் அந்த தேசத்தில் க்ஷாமம் வந்தது. ஏழை ஜனங்கள் பெரும்பாலும் பிழைக்க வழியில்லாமல் ஓடத் தலைப் பட்டார்கள். பசியின் கொடுமையால் பலர் மாண்டார்கள். இவ்விதக் கஷ்டங்கள் உண்டாகவே ராஜாங்கத்தார் மன மிரங்கி ஏழை ஜனங்களுக்குப் பஞ்சம் தெளிகிற வரையில் கஞ்சி வார்க்கத் தரும சத்திரம் ஏற்படுத்தினார்கள். அதில் அமர்ந்த உத்தியோகஸ்தர்கள் தங்கள் சொந்த க்ஷேமத் தையே பெரிசாக வெண்ணி, ராஜாங்கத்தாரிடமிருந்து கிடைத்த பணத்தில் 4-ல் ஒன்றைக் கஞ்சிக்குச் செலவிட்டு மிருந்த பணத்தை எடுத்துக் கொண்டு தங்கள் மனைவி

களுக்கு நகை பண்ணுவதிலும் காணி பூமி வாங்குவதிலும் செலவிட்டார்கள். இவ் வநியாயங்கள் எவ்வளவு காலம் நடக்கும்? ராஜாங்கத்தார் இவ்விஷயங்களை விசாரணை பண்ணி அப்பாதகர்களை தண்டித்தார்கள். அன்றியும் கஞ்சிக் கொட்டு தர்மத்தை சரியாகவைக்க வொரு யோக்கியனான உத்தியோகஸ்தன் ஒருவன் வேண்டுமென்று புன்னைக் கெழுத, புன்னையிலிருந்த பெரிய உத்தியோகஸ்தர்கள் ஜினதயாளுதான் சரியென்று அவனைக் குறிப்பாக எடுத்து அவ்வுத்தியோகத்துக்கு சிபார்சு பண்ணி யனுப்பினார்கள்.

“இவ்வதிகாரத்தில் ஜினதயாளுவுக்கும் மாதம் 300 ரூபாய் சம்பளம். ‘இதுவும் நமது நற்காலத்திற்கு ஒரு அடையாளம்; ஏழைகளை நம் மக்கட் போல் காப்பாற்றுவதால் நமக்கு ஈசன் அருளுமுண்டாகும்’ என்று ஜினதயாளு கருதி வெகு சந்தோஷமாக தனது குடும்ப சகிதம் புனா கோர்க்காடு சென்றான். அவன் வெகு பரிசுத்தன். பூததயை அதிகமாகவுள்ளவன்... தான் ஒப்புக் கொண்ட காரியத்தை வெகு தரும காரியமாக வெண்ணி, அந்த விஷயமாகச் செலவுக்கு வரும் பொருளை ஒரு அச்சடா ஒளியாமலும் சரியாய்ச் செலவிட்டும் பட்சபாதமின்றியும் வித்தியாச மின்றியும் எல்லா ஏழைகளுக்கும் சரியாக கஞ்சி வார்த்து அவர்கள் பசியை ஆற்றி அவர்களால் புகழப்பட்டான். எல்லா ஏழைகளு மவனைத் தெய்வமென்றே எண்ணினார்கள் சந்தோஷத்துடன் அவரவர்களுடைய வேண்டுதலை விசாரிக்கும் இவ்வுத்தமனைக் கண்டால் எல்லா ஏழை ஜனங்களும் தங்கள் தந்தை தாய்களைக் கண்டது போல் உல்லாசத்துடன் பேசுவார்கள். ராஜாங்கத்தில் மேலதிகாரிகள், அவன் செய்த ஏற்பாடுகளையும், அவன வைத்த கணக்குகளின் அழகையும் எல்லா ஜனங்களும்

ஒரேவிதமாய் அவனைப் புகழும் புகழையும் பார்த்தும் கேட்டும் அவனிடம் ஆச்சரியமடைந்து இவ்வளவு யோக்கியதையும் குணமுமுள்ள உத்தம உத்தியோகஸ்தன் எளிவாளனிடம் சிக்கிக் கொண்டிருந்ததை நினைத்து வருத்தப் பட்டார்கள்.”

அடுத்த பக்கத்திலேயே இரண்டு வருஷங்களிலே, தீனதயாளுவை கொச்சி சமஸ்தானத்து பேஷ்காராகப் பண்ணி யனுப்பினார்கள். மாதச் சம்பளம் ஆயிரம் ரூபாய் என்று அறிந்து நாம் களிக்கிறோம்.

“நற்பிறப்பில் பிறந்து வித்தையின் அவதாரமாகிய தீனதயாளு தனது மேலான குணங்களால் எல்லார்க்கும் நல்லவனாகிப் பெயரெடுத்தான். தனது பந்துக்களை ஒருவர் விடாமல் தன்னிடம் சேர்த்து வைத்துத் தனது காம்பீரியத்தால் அவர்கள் மனம் வருந்தாமல் நடந்தான். முதலில் சொற்பம் சிரமப்பட்டு பொருள் சேர்த்து, தனது தந்தை மகாதேவர் போன காலத்தில் தனது பிதுரார்ஜிதம் என்று ஏற்பட்டிருந்த நிலங்களையும் பூமிகளையும் மீட்டுக் கொண்டான்....தீனதயாளுவின் குழந்தைகள் எல்லாம் தங்கள் சிறுமையை விட்டு நீங்கிக் கலையுற்றுப் படித்து வித்துவான்களானார்கள். அவன் கொள்கையெல்லாம் எல்லார்க்கும் சரியாய் வித்தையை பயின்று கொடுத்து தாங்கள் சொந்தமாகச் சம்பாதித்து முன்னுக்கு வரும்படி செய்ய வேண்டியதுதான் ஒவ்வொருவருடைய கடமை என்பதேயாம். பனிமொழியாள் கற்பின் மகிமையாலும் தீனதயாளுவின் கம்பீர குணங்களாலும் அக் குடும்பம் அவ்விதமாய்ச் சிறப்படைந்தது.

‘அன்பறிவு தேற்ற மவாவின்மை யிந்நான்கு
நன்குடையான் கட்டே தெளிவு’

என்றபடி இந் நான்கு குணங்களும் தீனதயாளுவிடம் நீங்காமலிருந்தபடியால் அவனுக்கு ராஜாங்கத்தில் எப்பொழுதும் அதிக கீர்த்தியுண்டாய் அவன் புகழை எங்கும் பரவச் செய்தன" என்று தன் நாவலை முடிக்கிறார் நடேச சாஸ்திரியார்.

இந்த நாவலில் ராஜாங்க உத்தியோகத்துக்குப் போகிறவனின் குடும்ப வாழ்க்கை ஓரளவுக்கு உள்ளபடியே விவரிக்கப் பட்டிருக்கிறது. பொருளாதாரம் மற்றும் அதிகார விஷயங்கள் ஓரளவுக்கு மிகவும் பெரிதாக்கப் பட்டும், அவ்வளவாக உண்மைதான் என்று ஏற்றுக் கொள்ள முடியாதபடியும் சொல்லப்பட்டிருப்பது உண்மைதான். எனினும் ஆசிரியர் வற்புறுத்த முன்வருகிற படிப்பினைகள் அடிப்படையானவை; எல்லோரும் ஏற்றுக் கொள்ளத் தக்கவை. ஆங்கிலக் கல்வி கற்று உத்தியோகத்திலமர்ந்து உத்தியோக ஏணியில் ஏறுவதே சுவர்க்கம் என்று நம்மிடையே ஒரு தலைமுறையினருக்கு இருந்த சித்தாந்தத்தின் அடிப்படைகளை விளக்கும் நாவல் இது. கெட்டவர்கள் நல்லவர்களாவதும், நல்லவர்கள் எப்பரீக்ஷையிலும் சோர்வுறாமல் முன்னேறுவதும் சித்திரித்துக் காட்டப் பட்டிருக்கிறது தீனதயாளு என்கிற குணவான் சார்பில். இந்த நாவலில் வருகிற பாத்திரங்களோ, சம்பவங்களோ எவ்விதத்திலும் அசாதாரணமானவை அல்ல என்பதை இதன் தனி விசேஷமாகவே சொல்லலாம்.

"கதை என்ற வாக்கியம் நமது ஜம்புத்வீபத்திற்றான் முதல் முதல் உற்பவித்தது என்று ஆங்கிலேய சரித்திரக் காரர்களும் எழுதியிருக்கிறார்கள். **பஞ்ச தந்திரத்துக்** கொப்பான கதை உலகத்திலேயே கிடையாதென்பதும், அப்பஞ்ச தந்திரத்தை முதல் முதல் நுஷிம்வான் என்ற

ஸைஃபீலைப சக்கரவர்த்தி 6-வது நூற்றாண்டில் சம்ஸ்கிருதத்திலிருந்து மொழி பெயர்க்கக் கட்டளையிட்டு அவ்வாறு செய்து முடித்து, அவர் செய்த பேருதவியின் மூலமாய் பெர்ஷியா, அரேபியா, ஐரோப்பா தேசத்து நாடுகள் இவைகளெல்லாம் நமது தேசத்தின் கதைகளைத் தெரிந்து கொள்ளும் பாக்கியத்தைப் பெற்றனவென்பதும் சித்தாந்தம். இவ்வளவு தூரம் நாம் சொன்னதன் கருத்து நமது நாடு கதைகளின் களஞ்சியம் என்பதாம். நம்முன் வழங்கும் கதா ஸரித் ஸாகரம் என்ற கிரந்தம் போன்ற கிரந்தம் இவ்வுலகத்திலேயே கிடையாது" என்று முகவுரையின் தன் ஆராய்ச்சித் திறனை ஸ்தாபித்துவிட்டு ஆசிரியர் மேலும் சொல்லுகிறார்.

"இவ்வாறிருக்க நாம் ஒரு புதுக் கதையை இப்பொழுது நமது நாட்டாருக்குப் பிரசுரம் பண்ணியனுப்புவது கொல்லன் உலையில் ஊசி விற்பது போலாம் என்று ஜனங்கள் எண்ணலாம். ஆனால் அவ்வாறன்று நமது முயற்சி. ஆங்கிலேய பாஷையில் ஆயிரக்கணக்காக மாதந்தோறும் நாவல் என்று பெயரிட்டுள்ள கதைகள் எழுதப்படுகின்றன. நமது தேசத்தார்கள் 'நாவல், நாவல் என்று சொல்லுகின்றார்களே! அதில் என்ன அவ்வளவு ருசி. அதுவும் ஒரு கதைதானே!' என்று இங்கிலீஷ் படிப்பவர்களைக் கேட்பார்கள். இவ்வாறு இங்கிலீஷில் அப்பியாசமில்லாத நமது நாட்டார்கள் நாவல் என்பது இவ்வாறிருக்கலாம் என்பதை ஒருவாறறிந்து கொள்ளும் பொருட்டு நாம் தமிழில் ஒரு நாவல் எழுதிப் பிரசித்தம் செய்கின்றோம். 'நாவல்' என்பதன் பதார்த்தம் 'புதுமை' என்பதாம். அவ்வாறே இக்கிரந்தம் புதிய நடையில் எழுதப்பட்டிருக்கும் கதையாகின்றபடியால் 'நாவல்' என்ற பெயர் இதற்குக் கொடுக்கப்பட்டிருக்கின்றது. நமது தீனதயாளுதான் தமிழில் முதல் நாவல்.

இதை நமது நண்பர் அபிமானத்துடன் அங்கீகரிக்கும் நோக்கத்தைக் கண்டுகொண்டதும் இவ்வாறு பல நாவல்கள் பிரசித்தம் பண்ணச் சித்தமாகயிருக்கின்றோம்" என்று 1902-ல் ச. ம. நடேச சாஸ்திரி எழுதினார் அந்த முகவுரையில்.

பண்டித நடேச சாஸ்திரியார் 1859-ல் பிறந்தவர். 1906-ல் காலமானார். சென்னை அரசாங்கப் புதை பொருளாராய்ச்சிப் பிரிவில் உத்தியோகம் வகித்தார். தமிழிலும் ஆங்கிலத்திலும் ஏராளமாகவே எழுதியிருக்கிறார். அவர் தொகுத்து மொழி பெயர்த்த நாடோடிக் கதைகள் அற்புதமானவை. தீனதயாளுவைத் தவிர இன்னும் சில நாவல்களும் எழுதியிருக்கிறார். அவற்றில் 'திக்கற்ற இரு குழந்தைகள்' மிகவும் பிரசித்தமானது எனினும் அதற்கு மூலம் ஆங்கிலத்தில் இருக்கிறது. அது தீனதயாளுவைப் போலச் சொந்தக் கற்பனையல்ல. கோமளம் குமரியானது, மாமி கொலுவிருக்கை, தலையணை மந்திரோபதேசம் முதலிய நூல்களையும் அவர் எழுதினார். அவை ஆங்கில நூல்களைத் தழுவி எழுதப்பட்டவை என்றே சொல்லவேண்டும். இதைத் தவிர அவர் வால்மீகி ராமாயணத்தைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டிருக்கிறார்.

அவர் எழுத்திலே ஒரு நிதானமும் கவர்ச்சியும் உண்டு. நின்று வாசகர்களின் கண்களிலே கண்ணீர்த் துளி வரத் துள்ளிவிட்டுக்கொண்டே கதை சொல்லிக் கொண்டு போவதில் சமர்த்தர் அவர். பல இடங்களில் தீனதயாளுவில் கண்ணீர்த் துளி வரப் பல விஷயங்களை விவரித்திருக்கிறார் அவர். சிறிய நாவல்தான். தமிழில் முதல் நாவல் என்று பெருமையுடன் அவர் சொல்லிக் கொண்டாலும் அது உண்மையல்ல. ஆனால் முந்தி எழுதிய மூவருடைய

நாவல்களையும்விட நடேச சாஸ்திரியின் தீனதயாளு தமிழ் வாசகர்களுக்குப் பிடித்திருந்தது என்பது வெளிப்படை. இருபது வருஷங்களில் இது ஐந்து பதிப்புக்கள் வெளியானதிலிருந்தே இது சர்வ ஜனரஞ்சகமாக இருந்தது என்பது தெரிகிறதல்லவா?

தி. ம. பொன்னுசாமிப் பிள்ளையின்

# கமலாக்ஷி

**1903-ல்** தி. ம. பொன்னுசாமிப் பிள்ளை என்கிற நூலாசிரியரின் திவ்ய சமூகத்துக்குச் சென்னை கிறிஸ்தவக் கல்லூரிப் பேராசிரியர் எஸ். அனவரத விநாயகம் பிள்ளையவர்கள் ஒரு கடிதம் எழுதி கமலாக்ஷி என்கிற நாவலைப் பற்றித் தன் அபிப்பிராயத்தைக் கூறியிருக்கிறார். இத்தனை வருடங்களுக்குப் பிறகும் அது நமது கவனத்துக்குரியது.

"அன்புடை ஐயா,

தாங்கள் எழுதிய கமலாக்ஷி என்னும் நவீனத்தைப் படித்து மிகக் களிகூர்ந்தேன். சென்ற சில ஆண்டுகளாகத் தமிழ் நூல்கள் எழுதத் தலைப்பட்ட புலவர்கள் நவீன வழிகளில் புகுந்து உண்மை நெறியறியாது தமிழணங்குக்குத் தவறிழைத்தனரேயன்றித் தமிழ் மாந்தர்க்கு நன்மை புரிந்தாரல்லர். விசேஷமாய் உலகத்து நடவாத முழுப் பொய்க் கதைகளைக் கூட்டி நவீனமிதுவென விடுத்தார் ஒரு சாரார். மற்றொரு சாரார் கதை நல்லதேனும் தமிழ்மொழியில் சாமானியத் தேர்ச்சியுடையவனும் வாசிக்கக் கூசும் பழ நடையில் தம் நூல்களை இயற்றி வைத்தனர். இவ்விரு தரத்தாரே யன்றி, அருந்தமிழ் மொழிகளை ஒருங்கு கூட்டி கதை நயமின்றி பாஷை யாடம்பரத்திற்காகத் தம்மைத் தாமே மெச்சி நூல் செய்தார் இன்னொரு சாரார். இவையெல்லாம் தெய்வாதீனமாய் நன் மாந்த ரறிவைப் பற்றாதொழிந்தன. தங்களுடைய கமலாக்ஷி அத்தகைய பகுதிகளுக்குட்படாது, உயர்ந்த ஒழுக்கம் கற்பிக்கும்

கதையமைந்ததாய் எளிய இனிய தமிழ்நடையில் எழுதப்பட்டு நல்லுணர்வுடைய பண்டிதர்க்கும் நல்லுணர்வை நாடும் பாமரர்க்கும் ஸ்திரீ புருஷர் இருபாலர்க்கும் இனிமை பயந்து பயன்படுவதாகின்றது. கதையை வாசிக்கப்புகுவோர் அது பல தலைப்பட்டு இறுதி யத்தியாயத்தில் வந்து முடிவெய்தும் மாட்சியையும் நிகழும் விஷயங்கள் ஒவ்வொன்றும் தமிழ்க் குடும்பங்களில் நிகழத் தக்கவைகளேயென்னும் உண்மையினையும் வியவாமற்போகார்....நவீன நூல்களுள் இதனை யொத்தன இன்னும் ஒன்றிரண்டுக்கு மேற் காண்டலரிது."

இரங்கூன் பேபர் கரென்ஸி ஆபீஸ் பொக்கிஷதாரராக இருந்த ராய்சாகிப் திரிசிரபுரம் ம. பொன்னுசாமிப் பிள்ளை இயற்றிய நாவல்கள் ஆறு. கமலாக்ஷி, விஜயசுந்தரம் ஞானசம்பந்தம், ஞானாம்பிகை, சிவஞானம், ஞானப்பிரகாசம் என்று அவற்றிற்குப் பெயர். கமலாக்ஷி 1903-ல் வெளிவந்தது. கடைசி நாவல் 1915-ல் வெளிவந்தது. "கௌரவமான துரைத்தன உத்தியோகத்தில் ஒரு நாள் சேவை செய்து இப்போது உபகாரச் சம்பளம் பெற்று தேச யாத்திரை செய்து கொண்டிருப்பினும் என் காலத்தை வீணில் கழிக்காமல் சிறுவர் சிறுமிகளின் நன்மையையும் விநோதத்தையும் கருதி உலகாநுபவத்தை ஒட்டி இக்கதைகளை எழுதத் துணிந்தேன். திரிசிரபுரம் எனது ஜன்ம பூமியாதலால் இளமையில் தென்னாட்டுத் தமிழ் மக்களிடையில் வளர்ந்து வேளாளர் முதலானோருடைய குடிவாழ்க்கை வகைகளையும் அவர்கள் இயல்பையும் நான் நெருக்கமாகப் பழகியிருக்கிறேன். இரங்கூன் நான் துரைத்தன சேவை செய்திருந்த இடமாகையால், நாட்டுக் கோட்டை நகரத்து ஸாவகாரிகளான வேளாண் செட்டிகளோடு கொடுக்கல் வாங்கல் சம்பந்தமாக நெருங்

கிப்பழகி அவர்கள் இயல்பையும் அறிந்திருக்கிறேன். ஆகவே என்னுடைய கதைகள் பெரும்பாலும் வேளாண் குடிமக்களையும் வேளாண் செட்டிகளையுமே பற்றியிருக்கும்.

"பொருள் உற்பத்திக்குக் காரணமான வேளாண்குடிகளும் பொருள் பரவியதற்குக் காரணமான வேளாண் செட்டிகளும் நெடுங்காலமாய்த் தென்னாட்டின் வளப்பத்துக்கு ஆதாரமானவர்கள் என்பது பழைய தமிழ் நூல்களாலும் கர்ண பரம்பரையான வரலாறுகளாலும் தெளிவான விஷயம். இப்படிப்பட்டவர்களிடத்தில் காலாந்தரமாக வழங்கி வருகின்ற ஸதாசாரங்களின் இடையில் சில துராசாரங்களும் கிளைத்துத் தலை காட்டி வருவது தற்காலத்தில் பிரத்யக்ஷமான விஷயம். அவைகளுள் எளிதில் சீர்திருத்திக் கொள்ளக்கூடிய சிலவற்றை எடுத்துக் காட்டினால், அவர்கள் அவைகளை விலக்கவும் அதனால் நமது தேசம் சிறப்படையவும் ஒருவாறு முகாந்திரம் ஏற்படுமென்பதே இக் கதைகளை எழுதுவதில் நான் முக்கியமாய்க் கொண்டிருக்கும் உட்கருத்து" என்று ஆசிரியர் பொன்னுசாமிப் பிள்ளை ஞானம்பிகை என்கிற நாவலுக்கு எழுதிய முகவுரையில் கூறியிருக்கிறார். அவருடைய நாவல்களில் எனக்கு மிகவும் பிடித்தமானது ஞானம்பிகைதான். ஆனால் இங்கு அவருடைய முதல் நாவலான கமலாக்ஷியையே கவனிப்போம்.

விநாயகர் துதியுடன் நாவல் ஆரம்பமாகிறது, "சீர் பூத்த நீடுலகிற் செல்வி கமலாக்ஷி பேர்பூத்த நற்சரிதம் பேசிடவே—ஏர்பூத்த அம்பிகையாளீன்ற வருளைங்கர நால்வாய்த் தும்பி முகன்பாதந் துணை ... திருவருளை முன்னிட்டு நாம் எழுதும் இக்கதை பத்தொன்பதாம் நூற்றாண்டைப் பற்றியது. இங்கிலீஷ் 1830-ம் வருஷத்துக்கு நேரான தமிழ் விரோதி வருஷம் தை மாசம் 10-ந் தேதி

இரவு பத்து மணிக்கு ஆரம்பமாகிறது. ஆகாய வாணி வைரங்கள் பதித்த நீல வஸ்திரத்தை உடுத்திருப்பதுபோல் நீல நிறத்தைக் கொண்ட ஆகாயத்தில் நக்ஷத்திரங்கள் பிரகாசித்து வழிப் போக்கர்களுக்கு வழி காட்டவும் அவர்களுக்கு ஆயாசம் தோன்றாமல் வாயுபகவான் சிறு காற்று வீசி உதவி புரியவும் வனப் பெண் பலவித புஷ்பங்களின் நறுமணத்தைக் கொடுத்து ஸந்தோஷம் உண்டாக்கவும், அதைக் கெடுக்க விரும்பி மயிலாப்பூர் என்கிற நகரத்தை அடுத்த காட்டிலுள்ள பெரிய பல விருக்ஷங்கள், ஆகாயத்தை மறைத்து நக்ஷத்திரங்களுடைய பிரகாசத்தைத் தடுத்து, தங்களை அடுத்திருக்கும் இருளுக்கு உதவி புரிய எண்ணங்கள் கொண்டிருப்பது போல் அடர்ந்திருந்தன."

சினிமாக் காலத்துக்கு முந்தியதான இந்தச் சினிமா 'ஸெட்டிங்'கில் நாம் ஒரு வாலிபனையும் ஒரு யுவதியையும் சந்திக்கிறோம். அவர்களிருவரும் தங்கள் குடும்பத்துத் திருமணப் பழக்க வழக்கங்கள் பற்றிச் சற்று முற்போக்கு மனத்துடன் பேசிக்கொண்டு வருகிறார்கள். இரவில் காட்டில் இரு துஷ்டர்கள் ஒரு குழி வெட்டி அதில் ஒரு குழந்தையைக் கொன்று புதைக்க ஏற்பாடு செய்து கொண்டிருப்பதைத் தற்செயலாக ஒட்டுக் கேட்டு, இரு துஷ்டர்களையும் அடித்து விரட்டிவிட்டுக் குழந்தையை யுவதியிடம் கொண்டு வந்து தந்தான் வாலிபன். "'ஐயோ, இவ்விருட்டில் பார்க்கும்போதே குழந்தை அதிக ஸௌந்தரமாக இருக்கிறதே!' என்று சொல்லிக் கொண்டே பெண் குழந்தையை வாங்கி முத்தமிட்டாள்". மேலே அதிக தூரம் செல்வதற்கு முன் வேறு ஐந்து பேர் வந்து அந்த வாலிபனையும் பெண்ணையும் வளைத்துக் கொள்கிறார்கள். ஆனால் அவர்கள் பெண்ணுக்குரியவர்கள்தான் பெண்ணைத் திருடக்

கொண்டுபோன திருடர்களிடமிருந்து அவளை மீட்டுக் காப்பாற்றியதற்காகப் பெண்ணுக்கு உரியவர்கள் வாலிபனுக்கு நன்றி செலுத்திவிட்டு அதுவரை அவர்கள் மணம் செய்துகொள்ளத் தடை செய்தது தவறு என்றும் அவர்கள் மணம் செய்து கொள்ள இனி ஒரு தடையும் இல்லை என்றும் கூறுகிறார்கள். குறித்த முகூர்த்தத்தில் அவர்கள் இருவருக்கும் விவாகம் நடந்து நிறைவேறுகிறது.

இது, முதல் அத்தியாயத்துக் கதை. இரண்டாவது அத்தியாயம் இருபது வருடங்களுக்குப் பிறகு தொடங்குகிறது. "இங்கிலீஷ் 1850-ம் வருஷத்துக்கு நேரான தமிழ் ஸௌம்ய, வருஷ முதல் வாரத்தில் மயிலாபூரிலே வழக்கமாகக் கூடும் சந்தை கூடி ஜனங்களின் மிகுதியால் பேரிரைச்சல் உண்டாயிற்று. இந்த ஜனக் கூட்டத்தின் வேடிக்கையைப் பார்க்க வந்த இரண்டு வாலிபர்கள் தூரத்தில் நின்று, சந்தைக்கு வந்த பெண் பிள்ளைகளைப் பார்ப்பதும் ஏளனம் செய்வதும், பரிகாசமாகத் தங்களிருவரும் பேசிக் கொள்வதுமாகக் காலங்கழித்திருந்தனர்." இவர்களிருவரும் கதையில் நேரிட வருகிற 'வில்லன்கள்'. நமது கதாநாயகி கமலாக்ஷி அந்தச் சந்தர்ப்பத்திலே அவர்கள் கண்களில் படுகிறாள். அதற்குமேல் அந்தச் சந்தர்ப்பத்தில் ஒன்றும் பெரிதாக நடந்துவிடவில்லை. சந்தைக்குப் போய்த் திரும்பும் கமலாக்ஷி வழியோரத்தில் களைப்புற்று மூர்ச்சையாகிக் கிடந்த ஒரு விருத்தாப்பியரை வண்டியிலேற்றித் தன் வீட்டுக்குக் கொண்டுவந்து சேர்த்து வைத்தியம் முதலியன செய்கிறாள். நாலாவது அத்தியாயத்திலே வில்லன்கள் தங்களுடைய கை வரிசையைக் காட்டத் தொடங்கி விடுகிறார்கள். தனியாகப் போய்க் கொண்டிருக்கும் கமலாக்ஷியைத் தன்புறத்துப்போது கதாநாயகன் விஜயரங்கம் தெய்வாதீனமாக அங்கு வந்து சேர்ந்து

அவளைக் காப்பாற்றி அவள் வீடுவரையில் கொண்டு போய்ச் சேர்க்கிறான். அசம்பாவிதம் என்று எதையும் சொல்ல முடியாது—ஆனால் எல்லாமே கதாசிரியன் சௌகரியத்துக்காக அடிக்கடிக்காக நிகழ்கின்றன. அந்தக் காலத்தில் சர்வஜன ரஞ்சகமாக இருந்த ஆங்கில பத்தாம் ரக நாவலாசிரியர் ஜி. டபிள்யூ. எம். ரெய்னால்ட்ஸ் என்கிற ஆசிரியரை நினைவூட்டுகிற பகுதிகள் பல இருக்கின்றன கமலாக்ஷி என்ற இந்த நாவலிலே. எனினும் இது தமிழ் நாட்டுக் கதைதான். தமிழ் நாட்டுக் கதையைச் சொல்லப் பொன்னுசாமிப் பிள்ளை ஏற்றுக்கொண்ட பாணிதான் அவ்வளவு சரியாக இல்லை என்று சொல்ல நமக்குத் தோன்றுகிறது. சம்பவத்துக்கு முக்கியமளித்து ஒன்றன் பின் ஒன்றாகத் திடுக்கிடும் காரியங்கள் நிகழ வேண்டும் என்கிற கொள்கையுடன் எழுத ஆசிரியர் பாடுபட்டிருப்பது தெளிவாகவே நமக்குத் தெரிகிறது.

கமலாக்ஷியைக் குணக் குன்றாகமட்டும் தீட்டிவிட்டுத் திருப்தியடைந்துவிடவில்லை ஆசிரியர். அவளைப் பலமுள்ளவளாகவும் பலவீனமானவளாகவும் சிருஷ்டித்திருக்கிறார். பொன்னுசாமிப் பிள்ளையின் நாவல்களில் குண சித்திரங்கள் மிகவும் நயமானவை. ஒருவரையும் மகானாகவோ, அமானுஷ்யமாகவோ சித்திரிக்கவில்லை அவர். நாம் அறிந்த மக்களை, ஆண் பெண் குழந்தைகளை எந்தமாதிரி அறிந்திருக்கிறோமோ அந்தமாதிரியே தீட்டியிருக்கிறார் என்று சொல்லலாம். அநேகமாக எல்லோருக்குமே நகைச்சுவையிருப்பதாக அவர் சொல்லிச் சென்றிருப்பது வாசிப்பவர்களுக்குத் திருப்திகரமாகவே இருக்கிறது என்று சொல்ல வேண்டும். சம்பாஷணைகள் மூலம் கதையை விளக்குகிற கட்டங்களும் ஏராளமாக இந்த நாவலில் இருக்கின்றன. ஒன்றைப் பார்ப்போம்.

"சோமஸுந்தரம்: நீ ஏது இன்று கடைத் தெருவுக்கு வந்தது?

"விஜயரங்கம்: சில புத்தகங்கள் வாங்க வந்தேன்.

"சோமஸுந்தரம்: என்ன என்ன புத்தகங்கள்?

"விஜயரங்கம்: கம்பராமாயணம், வில்லிபுத்தூராழ்வார் பாரதம், திருக்குறள் முதலியவைகளே!

"சோமஸுந்தரம்: இப்புத்தகங்களெல்லாம் உன்னிடத்திலிருந்ததை நான் பார்த்திருக்கிறேனே!

"விஜயரங்கம்: ஆம்! என் தகப்பனார் இரவலாகக் கொடுத்திருந்தார். அவைகளைத் திரும்பக் கொடுத்துவிட எண்ணங்கொண்டு, தைப் பூசத்திற்காக வந்திருக்கும் கடைகளில் எனக்கு வேண்டியவைகளை வாங்கிக் கொள்ளும்படி உத்தரவளித்தார்.

"சோமஸுந்தரம்: அந்த ஜவுளிக் கடையைப் பார்த்தாயா? சேலம், மதுரை ஸரிகை வேஷ்டிகளில் அதிக விலையுயர்ந்தவைகள் வந்திருக்கின்றனவே, அவைகளில் ஏதாகிலும் வாங்கக் கூடாதா?

"விஜயரங்கம்: எனக்கு ஸரிகை வேஷ்டிகள் மேல் பிரியமே கிடையாது. என் தகப்பனார் என் செலவுக்கென்று கொடுத்திருக்கும் ஆயிரம் ரூபா இன்னும் அப்படியே இருந்தும், அதில் எள்ளளவையும் ஸரிகைத் துணிகளில் செலவிட எனக்குப் பிரியமில்லை.

"சோமஸுந்தரம்: உன் தந்தையிடம் பதினாயிரம் ரூபா கடன் வாங்கி மதுரைக்குப் போன கண்ணப்ப முதலியார் அனேக வருடமாயும் காசைக் கொடுக்காமலிருந்துவிடவே, அந்த ரூபா பதினாயிரமும் போனதென்றே மதித்து, முதலில் பாதியை விட்டு மற்றப் பாதியையாவது வாங்கி வரும்படி உன்னை யனுப்ப, நீ மதுரைக்குப் போனபொழுது, கண்ணப்ப முதலியார் உனக்கு வேண்டிய மரி

பாதை செய்து வட்டியும் முதலும் சேர்ந்த தொகையைக் கொடுக்காமற் போனால் கடன் வாங்கி வட்டியில்லாமல் முதல் மட்டும் கொடுத்தானென்று தன்னைப்போன்ற வியாபாரிகள் சொல்லிக் கேலியாகச் சொல்வார்கள் என்று கட்டாயப் படுத்த, அதைத் தடுக்க முடியாமல் நீ வட்டியும் முதலும் வாங்கி வந்ததற்கு உன் தகப்பனார் மகிழ்ந்து, வட்டியாக வந்ததில் ஆயிரம் ரூபா உன் செலவுக் காகக் கொடுத்தாரென்றுமே, அந்த ஆயிரந்தானே?

"விஜயரங்கம்: ஆம், என் தாயாரும் சட்டைப் பையில் இருபது ரூபா வைத்து, காலைதோறும் சட்டையை மாற்றும் பொழுது ஏதாவது குறைந்து வருகிறதா என்று பார்த்து வருகிறார்கள்...."

ஆனால் விஜயரங்கத்துக்குச் சில நாட்களிலேயே அவர்கள் தன்னுடைய உண்மைப் பெற்றோரல்ல என்று தெரிந்து விடுகிறது. அன்றே மனமுடைந்து அவன் வீட்டைவிட்டு வெளியேறிவிடுகிறான். ஆனால் போகுமுன் கமலாக்ஷி, கமலாக்ஷியின் தாயார், கமலாக்ஷியின் வீட்டில உடன் தெரிவரும் விருத்தாப்பியர் எல்லோருடைய மனத்தையும் கவர்ந்து விடுகிறான். இந்த நாவலில் வருகிற முக்கியமான கதா பாத்திரங்கள் எல்லோருக்குமே ஏதாவது விசேஷங்கள் சம்பவிக்க வண்ணம் இருக்கின்றன.

## 2

ஆசிரியர் பொன்னுசாமிப் பிள்ளை தன் கதா பாத்திரங்களை வாசகர்களுக்கு அறிமுகம் செய்து வைக்கிற பாணியைச் சிறப்பாகக் குறிப்பிடத்தான் வேண்டும்,

"எலுமிச்சம் பழம் போன்ற நிறமும், பருத்த முகமும், அகலமான நெற்றியும் நீண்ட நாசியும், சிறுத்த வாயும், சிவந்து சிறுத்த உதடும், கிஞ்சித்துக் கறுப்புள்ள கன்னமும்

மிகவும் நீண்டிராத தாடையும், வெண்மையான முத்தை நிகர்த்த பல் வரிசையும், நீண்ட கூந்தலும், மிகவும் பருத்திராத தேகமும், பதினேழு அல்லது பதினெட்டு வயது இருக்குமென்று மதிக்கத்தக்க ஒரு பெண்''—இவள்தான் கதாநாயகி கமலாக்ஷி. கதாநாயகிக்கு அழகைப்பற்றிய வரையில் வேறு என்ன சொல்ல முடியும்?

''சந்தன நிறமும், பரந்த முகமும், அகலமான நெற்றியும், பெருத்த கண்களும், மயிரடர்ந்த புருவமும், நீண்ட நாசியும், முத்துக்கள் போன்ற ஒழுங்கான பல் வரிசையும். புன்சிரிப்பைச் சதா கொண்டிருக்கும் வாயும், அரும்பு கட்டிவரும் மீசையும், பருத்த தோளும், விசாலமாகிய மார்பும், நீண்ட கைகளும், ஏறக்குறைய ஐந்தரையடி உயரமும், இருபது அல்லது ஒன்றிரண்டதிகமுள்ள வயதும் கொண்டு வியக்கத்தக்க வாலிபன்''—அவன்தான் விஜயரங்கம். கமலாக்ஷிக்கேற்ற கதாநாயகன் என்று சொல்வதைத் தவிர வேறு என்ன சொல்ல முடியும்?

திருமணங்களில் சிறந்தது எது, எப்படிப்பட்டப் பெண்ணைத் தேர்ந்தெடுக்கவேண்டும் என்று பொன்னுசாமிப் பிள்ளையின் கதாநாயகன் நினைக்கிறான் என்பதைச் சற்றுப் பார்க்கலாம். கதைக்கும் இதற்கும் பொருத்தம் எதுவுமில்லை எனினும், ஆசிரியர் வேலைமெனக்கெட்டு எழுதியிருக்கிறாரே, அதைக் கவனியாமல்தான் நாம் விடுவானேன்? கதாநாயகன் விஜயரங்கமும், சோமஸுந்தரமும் பேசிக் கொண்டிருக்கிறார்கள். விஜயரங்கத்துக்குக் கல்யாணமானதைச் சொல்வதுதான் கமலாக்ஷியின் கதை என்று சொல்வது ஒரு விதத்தில் பொருந்தும். சோமஸுந்தரம் கல்யாணமானவன்.

''விஜயரங்கம் : பெண்ணை யார் தேடிப் பார்த்து விவாகம் முடித்துக் கொள்ள வேண்டும் என்கிறாய்?

"சோமஸுந்தரம்: புருடரே பெண்ணைத் தேடி அவள் குணமறிந்து, ஒருவரை ஒருவர் இச்சித்த பின் விவாகம் செய்து கொள்ளுதலே உத்தமமென்று நினைக்கிறேன்.

"விஜயரங்கம்: ஏன் புருடரே பார்க்கவேண்டும்? வேறொருவர் அவருக்காகப் பார்த்தால் திருப்தியில்லையா?

"சோமஸுந்தரம்: எவ்விதம் திருப்தியாகும்? பெண்ணை நேரிற்கண்டு இச்சித்தபின் விவாகம் முடிக்க வேண்டுமென்பதல்லவா கருத்து?

"விஜயரங்கம்: ஒரு வாலிபன் தான் மணந்து கொள்ளத் தகுந்த முறையிலுள்ள ஒரு ஸௌந்தரியமுள்ள பெண்ணைக் கண்டதும் முதலில் என்ன எண்ணுவான்?"

இந்தச் சம்பாஷணை ஒன்பது பக்கங்களுக்கு நீளுகிறது என்று எண்ணும்போது எவ்வளவு அவசரப்படாமல் எழுதியிருக்கிறார் ஆசிரியர் பொன்னுசாமிப் பிள்ளை என்று தான் எண்ணத் தோன்றுகிறது நமக்கு. இந்தச் சம்பாஷணைக்கு முத்தாய்ப்பு வைத்த மாதிரி வருகிறது ஒரு காட்சி. சோமஸுந்தரத்தின் மனைவியை — மனோன்மணியை — அவள் மாமியாரும் நாத்தனாரும் சேர்ந்து படுத்தும் காட்சி அது. சற்று மிகைப்படுத்தியே கூறப்பட்டிருப்பது போல இருந்தாலும் வளமைக்கு ஏற்ற சித்திரம் தான்.

"காளியாயி: அம்மா, மனோன்மணி அரிசி அரித்த இடத்தைப் பார்த்தீர்களா? எத்தனை அரிசி சிந்திக் கிடந்தன? நாலைந்துக்குக் குறையாதே! அவைகளைப் பொறுக்கிப் போட்டால் இவளுக்கு என்ன கேடு?

"பேய்ச்சியாயி: இவளுக்குக் கேடு வந்து கொண்டு போகப் போகிறது. அன்றைக்கே போய்விடுவாள் என்று சந்தோஷமாயிருந்தேன். போகாமல் எழுந்து உட்கார்ந்து கொண்டாளே?

"மனோன்மணி: அத்தை! நான் அரிசி யரிக்கும் பொழுது என் கண்ணுக்குப் படாமல் ஒன்றிரண்டு விழுந்ததோ என்னவோ நான் பார்க்கவில்லை. பார்த்திருந்தால் அவைகளை எடுத்துக்கொள்ளாமல் வருவேனா? அந்தக் குற்றத்தை மன்னிக்கவேண்டும்.

"பேய்ச்சியாயி: அடி உனக்குக் கண் தெரியாமலா நின்று துழாவுகிறாய்?

"காளியாயி: அடி! அடி! என்ன சொன்னாய்? அம்மா! இவள் சொல்வதைக் கேட்டீர்களா? அடி! எத்தனை அரிசி யிருந்ததென்று சொன்னாய்? நாலரிசிகளை எறிந்துவிட்டு வரவில்லையா? ஒரு பிச்சைக்காரனுக்கும் போடக் கூடாதா?

"மனோன்மணி: மச்சி! நான் வேண்டுமென்றா எறிந்து வந்தேன்?

"காளியாயி: அடி! நீ இல்லையென்று ஸத்யம் பண்ணுவாயா?....அம்மா! இவள் அம்மியில் மிளகாய் வைத்து அரைத்தாளே, அப்பொழுது என்ன நடந்து தெரியுமா?

"பேய்ச்சியாயி: எனக்கெப்படித் தெரியும், என் கண்மணி! இந்தக் கழிச்சலில் போவாள் என்ன செய்தாள்?

"காளியாயி; இவள் மிளகாய் அரைத்துக்கொண்டிருக்கும்போது இவள் எண்ணம் எவன்மேல் இருந்ததோ? என்ன நினைவிலிருந்தாளோ? அநியாயமாக மிளகையெல்லாம் சிந்திவிட்டாள்.

"மனோன்மணி: மச்சி! ஒரு மிளகுதானே கீழே விழுந்திருந்தது?

"பேய்ச்சியாயி: ஏண்டி! ஒரு மிளகுதான் சும்மா வந்ததோ? உன் அப்பன் வீட்டிலிருந்தா வந்தது? (என்று தாடையில் அடித்தாள்.)"

கொஞ்ச நேரத்துக்குள் மனோன்மணியைப் பிடித்து வதைக்க அவள் மாமனாரும் வந்து சேர்ந்து கொண்டார். விஜயரங்கமும் சோமசுந்தரமும் பேசிக்கொண்டிருந்த லட்சிய மனத்தை அடுத்து வந்த இந்தக் காட்சி நாவலிலே மிகவும் சிறப்பாக அமைந்திருக்கிறது என்றே சொல்லலாம். ஒருநாள் மனோன்மணியை அவள் மாமியாரும் நாத்தியும் அடித்துப் பிடித்து வெளியே தள்ளிவிடுகிறார்கள். அவள் கணவன் வந்து அவளைக் காப்பாற்றுமுன் வேறு ஒருவனிடம் அவள் கொஞ்சிக் குலாவுவதைக் கண்டு ஒதுங்கி விடுகிறான். அன்று மனோன்மணி கொஞ்சிய புருஷன், புருஷ வேடத்திலிருந்த ஒரு பெண் என்பது கடைசியில், பதினேழு அத்தியாயங்களுக்குப் பிறகுதான், கதைப் போக்கில் தெளிவாகிறது.

கெட்டவர்களையும் நல்லவர்களையும் மோதவிடுகிற காரியத்தை வெகு லாகவமாக வரிசையாகக் குழப்பம் எதுவும் வந்துவிடாமல் செய்திருக்கிறார் பொன்னுசாமி பிள்ளை. யார் கெட்டவர், யார் நல்லவர் என்பதில் வாசகர் மனத்தில் சிறிது நேரம்கூட எள்ளளவு சந்தேகமும் வந்து புகுந்து விடாதபடி கதையை நடத்திச் செல்கிறார். ஓடிப் போகிற விஜயரங்கமும், தூக்கிச் செல்லப்பட்ட கமலாக்ஷியும் மாறி மாறி நல்லவர்களையும் கெட்டவர்களையும் சந்தித்துத் தங்கள் அனுபவங்களை விருத்தி செய்துகொள்கிறார்கள். கமலாக்ஷி சாதுரியமாகப் பேசவும், பிரிந்தவர்களில் நல்லவர்களைக் கூட்டி வைப்பதில் திறமையும் ஊக்கமும் உள்ளவளாக இருக்கிறாள். விஜயரங்கம் தனக்குற்ற இடுக்கண்கள் எதையும் பொருட்படுத்தாதவனாக முன்னேறுகிறான். ஒவ்வொரு அனுபவமும் அவர்களிருவருடைய மனம் விசாலிக்கவும் அவர்களிருவரும் தங்களையும் மீறி நெருங்கவும் உபயோகப்படுகிறது. ஒரு கதாகர்த்தரின் திறமை

யுடன் சேனு வீரர்கள் என்கிற சம்பவங்களை ஒரு குறிப்பிட்ட முடிவு நோக்கி நடத்திச் செல்கிறார் ஆசிரியர். லகான்கள் அவர் கையில் கெட்டியாகப் பிடிபட்டிருக்கின்றன; கதை என்னும் குதிரை அவர் திருப்புகிற பக்கமெல்லாம் திரும்புகிறது; ஆனால் அது என்ன குதி போட்டாலும், எவ்வளவு உயரத் தாண்டி விழுந்தாலும், குறிப்பிட்ட முடிவு நோக்கி ஒவ்வொரு அடியாக நகருகிறது தெளிவாகவே வாசகர்களுக்கும் தெரிகிறது என்றே சொல்லலாம். பல சம்பவங்களைப் பூரணமாகத் தீட்டிவிட்டு, மாறு வேஷம், ரகசியம், ஒட்டுக் கேட்டல் போன்ற யுக்திகளால் தன் வாசகர்களைத் திருப்தி செய்து வைக்க முயலுகிறார் ஆசிரியர். கலையை மறைப்பதுதான் கலை என்கிற வாக்கியம் உண்மையானால் இந்தக் கதையில் கலையென்று சொல்லும்படியாக ஒன்றுமில்லை. ஏனென்றால் எதை உத்தேசித்து ஆசிரியர் ஒன்றைச் சொல்கிறார் என்பது நமக்குக் கச்சிதமாகவே தெரிகிறது. ஆனால் தெரிந்த ஒன்றைப் படித்துத் தெரிந்துகொள்வதிலும் இன்பம் இருக்கத்தானே இருக்கிறது?

கமலாக்ஷி இடுக்கண்களுக்குத் தப்பிச் சொக்கலிங்கம் என்பவன் வீட்டில் வந்து தங்குகிறாள். சொக்கலிங்கத்துக்கும் அவன் காதலித்த அம்புஜத்துக்கும் அழியாத பிணக்கென்று கண்டு அதை நிவர்த்திக்கத் தன் கஷ்டங்களையும் மறந்துவிட்டு ஏற்பாடு செய்கிறாள். அந்தக் கட்டத்தைப் பூராவுமே எடுத்து எழுதிவிடலாம் போல இருக்கிறது. என்றாலும் சில பகுதிகளை மட்டுமே இங்கு பார்க்க முடியும். இந்தமாதிரி கிளைக் கதைகள் பலவற்றைத் திறம்படப் பொன்னுசாமிப்பிள்ளை இந்த நாவலிலும் பின்னர் எழுதிய பல நாவல்களிலும் கையாண்டிருக்கிறார் என்று சொல்ல வேண்டும். ஞானாம்பிகை என்கிற நாவலில் எட்டு

இடங்களில் கதாநாயகி பலதரப்பட்ட பிறருடைய வாழ்க்கைச் சிக்கல்களை விடுவிக்கிறாள் என்பது சித்திரிக்கப்பட்டிருக்கிறது. தன் கதாநாயகிகளுக்கு இதை ஒரு சிறப்பான குணமாகத் தந்து கதை எழுதியிருக்கிறார் பொன்னுசாமிப்பிள்ளை என்றுதான் சொல்லவேண்டும்.

“சொக்கலிங்கம்: அம்மா கமலாக்ஷி! அதை வெவ்வேறு விதமாகத் திருப்பிக் கேட்கவேண்டிய அவசியம் இல்லை. எனக்குக் கெடுதியைச் செய்தவர்கள், சாகும் தருணத்தில் ஒருவரைவிட்டு மன்னிப்புக் கேட்டு வரும்படி அனுப்பினால், நான் நேரில் சென்று அவர்கள் மனம் சந்தோஷமடையச் செய்து வருவேன். வேறென்ன கேட்கப் போகிறாய்?

“கமலாக்ஷி: வேறொன்றும் இல்லை, தாங்கள் சொல்லியது உண்மைதானா?

“சொக்கலிங்கம்: அது விஷயத்தில் சந்தேகம் கொள்ளவேண்டிய காரணமென்ன?”

அம்புஜத்தைப்பற்றிய பேச்சு வந்ததும் சொக்கலிங்கம் நழுவிவிட யத்தனிக்கிறான். “அவள் பேச்சு ஏதாகிலும் இருந்தால் அதை என் காதில் போடவேண்டாம். (என்று வெளியே போக யத்தனித்தான்.)

“கமலாக்ஷி: அண்ணா! தாங்கள் இதுவரை சொன்னவைகளெல்லாம், சர்க்கரை இனிப்பென்று ஏட்டில் எழுதி வைத்துக் கொண்டது போலாயினவே யன்றி, உண்மையாகக் காணமற் போனதைக் குறித்து வியசனிக்கிறேன்.

“சொக்கலிங்கம்: அம்மா கமலாக்ஷி! அம்புஜம் என் விஷயத்தில் செய்ததை அறிந்தால், என்னை நிந்திக்க மாட்டாய்.

"கமலாக்ஷி : ....அம்புஜம் தங்கள் விஷயத்தில் செய்த குற்றம் என்ன? அவள் தங்களை விவாகம் செய்து கொள்கிறேனென்று சொல்லி அவ்வாக்கியத்தினின்றும் தவறினதுதானே குற்றம்?

"சொக்கலிங்கம்....அம்புஜம் என்னை விவாகம் செய்து கொள்ளாதது குற்றமா யிராமற் போனாலும், தன்னுடைய துர்நடத்தைக்கு அடையாளமாக ஒரு பிள்ளையைப் பெற்று வைத்திருக்கிறாளே! அது ஒன்று போதாதா? வேறு ஒரு குற்றமும் செய்ய வேண்டுமா? அவளுடைய நடத்தையை அறிந்து, அவள் தாயாரும் இறந்தாள். அவள் தமையனும் தேசாந்திரம் போனான். இதை அல்லவென்று எப்படி வெட்டிப் பேசப் போகிறாயோ பார்க்க வேண்டும்!

"கமலாக்ஷி: அண்ணா! தாங்க ளறியாததை நான் என்ன சொல்லப் போகிறேன்! அம்புஜம் குழந்தையைப் பெற்று வைத்திருப்பது, அவளை மேன்மையாக்குகிறதே யன்றி, தாழ்வை யுண்டாக்கவில்லையென்று எனக்குக் காண்கிறது. எவ்விதமெனில் துராசாரத்திலே கைதேறிய வளுக்குக் கர்ப்பம் உண்டானால், அவள் உலகத்தை வஞ்சிக்கக் கருவை அழிப்பதையும், பெற்ற பிள்ளையை எறிந்துவிடுவதையும், கண்டும் கேட்டு மிருக்கிறோம். அக் கொடுமை ஒன்றும் செய்யாமல் குழந்தையை அன்போடு வளர்ப்பதை யோசித்தால், தான் மதி மோசத்தால் கற் பழிந்தவளென்று விளங்குகிறது. உலகத்தை வஞ்சிக்க எண்ணங் கொள்ளாமல் தங்கள் வினையை நொந்திருப்பவர் கள் எல்லாம் பாவச் செயல்களுக்குப் பயப்படுவார்க ளாதலால், அவர்களைக் கண்டு பரிதாபப்படாமல் கோபம் கொள்வது நியாயமல்லவே! தாங்கள் அவள் மேலிருக்கும் கோபத்தைவிட்டு யோசித்தால் உண்மை விளங்கும். தாங்கள் சற்று நேரத்துக்கு முன் கொடுத்த வாக்குறுதியி

னின்னும் மாறி, மற்றவர்கள் வாக்குத் தவறினார்கள் என்று குற்றம் சாட்டினால் நியாயமா? (என்று நகைத்தாள்) அவ்விடத்தில் நின்று கேட்டிருந்த தாயாரம்மாளும் மரகதமும் நகைத்தார்கள்."

அவளை மன்னிக்க அம்புஜத்தின் மரணப்படுக்கையருகில் போய் சொக்கலிங்கம் உட்கார்ந்திருக்கும்போது உண்மை வெளியாகிறது. அந்தக் குழந்தை அவள் பெற்ற குழந்தையே யல்ல. கலியாணமான அவள் தமக்கை துராசாரத்தினால் பெற்ற குழந்தையை தன்னுடையது என்று சொல்லித் தன் தமக்கையின் கௌரவத்தைக் காப்பாற்றத் தன் காதலைத் தியாகம் செய்து விட்டாள் என்று தெரியவருகிறது. திடுக்கிடும் சம்பவம்தான். ஆனால் நம்பும்படியாகச் சொல்கிற கலையிலே கை தேர்ந்தவர் பொன்னுசாமிப் பிள்ளை. இவ்வளவும் ஆனபிறகு மரணப் படுக்கையிலிருந்த அம்புஜம் பிழைத்து எழுந்துவிடுவது கூட அவ்வளவு அதிசயிக்கத்தக்க விஷயமாகத் தோன்றவில்லை!

## 3

சம்பவங்களைப் பின்னி ஒழுங்கு படுத்துவதில் தமிழ் நாவல் இலக்கியத்தை வளப்படுத்துவதில் முதல் முதலாகப் பொன்னுசாமிப்பிள்ளைதான் ஊக்கம் காட்டினார் என்று சொல்ல வேண்டும். மாதவையாவும், ராஜமையரும் வேதநாயகம் பிள்ளையும், நடேச சாஸ்திரியாரும் நேராகவே கதை சொல்ல விரும்பினார்கள். தமிழ் நாவல் பொன்னுசாமிப் பிள்ளையின் கையில் சிடுக்கில்லாத பின்னலாக மாறிற்று; அழகான பின்னலாக மாறிற்று. நாவல் எழுதித் தேறத் தேற அவர் கை இந்தப் பின்னல் வேலையில் பிரமாதமான

தேர்ச்சி பெற்றது. கமலாக்ஷியைவிட ஞானாம்பிகையில் இந்தப் பின்னல் வேலை அபூர்வமாக அமைந்துவிட்டது. எனினும் கமலாக்ஷியிலும் பின்னல் சிறப்பாகவே இருக்கிறது என்று தான் சொல்லவேண்டும்.

கமலாக்ஷியின் கதைப் பின்னலிலே கதையின் ஆரம்பத்திலே அநாதையாகத் தெரு ஓரத்தில் மூர்ச்சையாகிக் கிடந்த கிழவர் ஒருவரை வீட்டுக்குக் கொணர்ந்து உபசரித்து வைத்தியம் செய்தாள் என்று சொன்னேனல்லவா? அந்தக் கிழவர் முக்கியமான ஒரு புதிராக இருக்கிறார் அவர் கதையில் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் தோன்றுகிறார். கமலாக்ஷியும் அவரும் மிகவும் நெருக்கமாகவே பிணைக்கப்பட்டிருக்கிறார்கள். அவரைப் பற்றிக் கடைசி வரையில் விஷயத்தைச் சொல்லாமலே வாசகனின் ஆவலைத் தூண்டிவிட்டுக் கொண்டே கதையை நடத்திச் செல்கிறார் ஆசிரியர். அவர் யாரென்று தெரிவிக்கிற காட்சி தான் கதைக்கே மையமாகவும் சிகரமாகவும் அமைகிறது என்று சொல்ல வேண்டும். இந்த யுக்தியை ஆசிரியர் பொன்னுசாமிப்பிள்ளை தன் நாவல்கள் ஆறிலுமே கையாண்டிருக்கிறார்.

கமலாக்ஷியின் தாய் செழுங்கமலத்துக்கு ஒரு தம்பி ஊரிலிருந்து கொண்டே தீங்கிழைத்தான். கமலாக்ஷியையும் மணந்து, கெடுத்துவிட முயன்றான் அவன். இந்தப் பெரியவர் செழுங்கமலத்தின் இன்னொரு சகோதரர்; விஜயரங்கம் அவர் மகன் என்றும் தெரிகிறது. கமலாக்ஷியின் துயரங்கள் எல்லாம் அத்துடன் நீங்கிவிடுகின்றன. இந்த இடத்தில் அந்தச் சந்தர்ப்பத்தில் நல்லவர்களும் கெட்டவர்களுமாகக் கதையில் சம்பந்தப்பட்டவர்கள் எல்லோரும் அங்கு கொண்டுவந்து சேர்க்கப்படுகின்றனர். நாடக, சினிமா தோரணையில் கதையை நடத்திச் செல்ல

பிரமாதமான சூழ்நிலையைச் சிருஷ்டித்துக் கொண்ட ஆசிரியர் முடிச்சுகள் போட்டு முறையே அவிழ்த்து அழகாக முடித்துவிடுகிறார்.

"மயிலாபுரியில் நாலைந்து வேலி நிலத்தைத் தோட்டமாகக் கொண்ட ஓர் அரண்மனையை மிகவும் அலங்காரப் படுத்தி, வருணங்கள் புதிதாக வைத்தும், அரண்மனையின் மேல் மெத்தையிலே கூடத்தின் பல விடங்களிலும் விநோதமான படங்களை மாட்டியும், பல வருண மமைந்த சுடரொளி வட்டத் தீபங்கள் தொங்கவிட்டும், ஒரு பக்கம் மேடை ஏற்படுத்தி, அதை மகமல் பட்டால் மூடி மூன்று நாற்காலிகள் போட்டும், அதற்கு எதிரில் அனேக நாற்காலிகளை வரிசை வரிசையாக அமைத்து இரு பக்கத்திலும் அதிக இடம் காலியாக விட்டும், சிறிய மேஜைகளைச் சரிகைகளில் விசித்திரமான வேலைகளமைந்த பட்டுத் துண்டுகளால் மூடி, அவைகளின் மேல் நூதனமான பதுமைகளையும் யானைத் தந்தத்திற் செய்த அற்புதமான சாமான்களையும் கண்ணாடியால் செய்த வேடிக்கை சாமான்களையும் புஷ்பங்கள் நிறைந்த வெள்ளித் தட்டுகளையும் காலியாக இருந்த இடத்தின் மத்தியில் இடைக்கிடை வைத்தும், மூலைக்கு மூலை புஷ்பத் தொட்டிகளை அமைத்து, சந்தனக் கிண்ணங்களும் பன்னீர்ச் செம்புகளும் தாம்பூலமும் கொண்ட தட்டுகளைப் பல பக்கங்களில் வைத்தும் அலங்கரித்திருப்பதை ரங்காராவ் பார்த்து இடையிடையே இங்கு மங்கும் சீர்திருத்தும்படி கலியாணசுந்தர முதலியாரிடத்தும் விஸ்வநாத செட்டியாரிடத்தும் சொல்லிக்கொண்டிருந்து, சாப்பாடு விஷயம் எப்படியிருக்கிறதென்று கேட்டார்...."

பின்னர்: "ரங்காராவ்—ஐயா கலியாணசுந்தர முதலியார்! பத்திரிகைகளை நான் சொன்னவர்களுக்கெல்லாம்

அனுப்பியிருக்கிறீர்களா? அவைகள் எல்லாருக்கும் சேர்ந்திருக்குமோ?

"கலியாணசுந்தர முதலியார்: தாங்கள் உத்தரவு செய்தவர்களுக்கெல்லாம் அனுப்பியதோடு, நான் அறிந்தவர்களுக்கும் அனுப்பியிருக்கிறேன். வெளியூரிலிருந்து அநேகர் இவவூருக்கும் வந்திருப்பதாகக் கேள்வி.

"ரங்கராவ்: நம்மூரில் நான் சொன்னவர்களன்றி, யார் யாருக்குப் பத்திரிகைகளை அனுப்பி, வரும்படி கேட்டுக் கொண்டீர்கள்?

"கலியாணசுந்தர முதலியார்: சோமசுந்தர முதலியார், வைத்தியர் ஜகந்நாத முதலியார் தங்கை, அவள் வீட்டில் வந்திருக்கும் நடராஜ முதலியார் என்னும் ஒரு பெரியவர். செழுங்கமலம் வராவிட்டால் பெரியவர் வரமாட்டார்....

"ரங்கராவ்: நீர் சொல்வதைப் பார்த்தால், நடராஜ முதலியார் என்கிற பெரியவரை வரவழைக்க வேண்டுமென்றே இவ்வளவு பேரையும் கூப்பிட்டிருக்கிறமாதிரி இருக்கிறது. ஆனதால் நடராஜ முதலியார் பெரிய தனவந்தராக இருக்க வேண்டும்.

"கலியாணசுந்தர முதலியார்: அவர் தனவந்தரல்ல. அவர் ஏழைகளிலெல்லாம் ஏழையே....ஆனால் அவர் இருந்தால் இவ்விடம் வரப்போகும் தனவந்தரான தங்கள் நண்பரைச் சந்தோஷப்படுத்துவார் தன் பேச்சால் என்றே வரும்படி கேட்டுக் கொண்டேன்...."

நடராஜ முதலியார் வரும்போது செழுங்கமலத்தைப் பார்த்து, "அம்மா! இவ்விடத்துக்கு வரப் பிரியமில்லை என்று சொல்லிய என்னைக் கட்டாயப்படுத்தி அழைத்து வருகிறாயே! இதனால் உனக்கு என்ன பிரயோசனம்? நாம் தனவந்தரோடு நின்று வார்த்தையாடப் போகிறோமா?

இல்லையே. நாம் வீட்டில் சாப்பிடாமல் வந்தது தப்பிதம். வேலையில்லாமல் பத்திரிகையை அனுப்பிவிட்டார். நீயும் உன் மகளும் இந்த அரண்மனையிலிருந்து என்னை வரும்படி அழைக்க நேர்ந்தால், நான் வருவது கட்டாயம். அதைவிட்டு எவனோ வரப் போகிறான், அவனுக்காக ரங்காராவோ தொங்கராவோ படாத பாடெல்லாம் பட்டு, தன் சிநேகிதனைச் சந்தோஷப்படுத்த எண்ணங் கொண்டிருக்கிறானென்ற இடத்தில் நமக்கென்ன வேலை என்றெண்ணாமல் வந்து விட்டோம்' என்றார்."

எல்லாரும் கூடியிருக்கும் சபையில் ஊருக்கு தனவந்தராக அழைக்கப்பட்டவரில் பெரிய மனிதராக வேஷம் போடும் செழுங்கமலத்தின் சகோதரன் ஜகந்நாத முதலியாரின் வண்டவாளங்கள் எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக வெளியாகின்றன. செழுங்கமலத்தின் சொத்தைப் பராதீனப் படுத்தி ஏமாற்ற நினைத்ததும், அவன் கமலாக்ஷியை துராக்கிரமமாகச் சிறைப் பிடித்ததும் வெளியாகிறது. சோமசுந்தரமே முன்னின்று பல பழைய விஷயங்களை வெட்டவெளிச்சமாக்குகிறான். ஜகந்நாத முதலியார் ஆரம்ப முதலே தன் சகோதரனை ஏமாற்றச் சூழ்ச்சி செய்து வந்தது வெளியாகிறது. நாவலின் முதல் அத்தியாயத்தில் ஒரு குழந்தைக்குக் குழி வெட்டினார்களே—அந்தப் பாதகர்கள் வந்து அந்தக் குழியை அந்தக் குழந்தைக்காகத் தாங்கள் வெட்டியது ஜகந்நாத முதலியாரின் தூண்டுதலால் தான் என்று சாக்ஷி சொல்கிறார்கள். அன்று காப்பாற்றப் பட்ட குழந்தைதான் கலியாணசுந்தர முதலியாரின் வளர்ப்புப் பிள்ளை விஜயரங்கம் என்று ஏற்படுகிறது. இறந்து விட்டவர்கள் என்று ஜகந்நாத முதலியார் எண்ணியிருந்தவர்களே உயிர்பெற்று வந்து அவருக்கு எதிராகச் சாக்ஷி சொல்கிறார்கள்.

கதாபாத்திரங்கள் எல்லோரும் அங்கு வந்து கூடியிருக்கும் சமயத்தில் ரங்காராவின் நண்பர் அந்த மாளிகையின் சொந்தக்காரரான தனவந்தர், நடராஜ முதலியார் என்கிற பெயரில் செழுங்கமலம் வீட்டில் அநாதை போல இருந்து வந்த பெரியார்தான் என்று ஏற்படுகிறது. அவர் ஜகந்நாத முதலியாரின் சகோதரர். விஜயரங்கத்தின் தகப்பனார். "இவரே அருணாசல முதலியார். இந்தப் படுபாவி ஜகந்நாத முதலியாரால் இவர், தம் ஊரை விட்டு ஓடி, இருபது வருடங்களாக அநேக கஷ்டங்களை அனுபவித்தார்" என்றார் ரங்கராவ்! "அருணாசல முதலியார், தமக்கு எதிரிட்டவர்கள் சந்தோஷமடைய அவர்களிடம் நன்மொழி புகன்று; பின் ரங்காராவைப் பார்த்து, 'அப்பா ரங்காராவ்! ஜகந்நாதம் என் விஷயத்தில் செய்த கொடுமைகள் அதிகமாயிருந்தும் அவன் இன்றடைந்த அவமானம் போதுமானது. அவனை இன்னும் துன்பத்திலாழ்த்துவது நியாயமல்ல, நாம் அவனை மன்னித்ததாகச் சொல்லி வரலாம் வா,' என்றார்." ஆனால் ஜகந்நாத முதலியார் சொல்லாமல் அங்கிருந்து நழுவிப் போய்விட்டார்.

பிறகு சம்பந்தப்பட்டவர்கள் எல்லாரும் இருபது வருஷத்திய சரித்திரங்களைச் சொல்லிக் கதையில் விட்டுப் போன இடங்களை நிரப்புகிறார்கள். கமலாக்ஷிக்கும் விஜயரங்கத்துக்கும் திருமணம் நிச்சயமாயிற்று. ஜகந்நாதன் இறந்து விட்ட செய்தி கேட்டு அருணாசல முதலியார் வருந்துகிறார். "ஜகந்நாதன் என் விஷயத்தில் செய்ததெல்லாம் பொருளை நாடியே யல்லாமல் வேறல்ல! ஆனதால் அவனுக்கு வேண்டிய தனத்தைக் கொடுத்து அனுபவிக்கச் செய்ய வேண்டுமென்று எண்ணியிருந்த எண்ணத்தை அவன் மண்ணாக்கி, பாஷாணத்தை உண்டு இறந்ததே எனக்குவருத்தத்தைத் தருகிறது" என்று துன்பப்பட்டார்.

கமலாக்ஷியின் சிறுவர்களுக்கு வயது பன்னிரண்டும் பத்தும் எட்டும் ஆன காலத்தில் அருணாசல முதலியார் அடிக்கடி சிறுவர்களை ஒன்று சேர்த்து உட்காரவைத்து, "தன் மனைவியோடிருந்த முத்துகுமார முதலியாருக்கும் பேய்ச்சியாயிக்கும் காளியாயிக்கும் நேரிட்டதை உங்களுக்கும் தெரியும்படிச் சொல்லுகிறேனென்று சொல்லி, 'அவர்கள் அடாத காரியத்தைச் செய்ததால் படாதபாடுபட்டு இறந்தார்கள். உங்கள் தாய் தந்தையர் நற்குணத்தை நீங்களும் கொண்டிருந்தால் மேன்மையாக மதிக்கப்படுவீர்கள்' என்று அடிக்கடி சொல்லிக்கொண்டிருப்பதை விஜயரங்க முதலியாரும் கமலாக்ஷி அம்மாளும் கேட்டுப் புன்னகை செய்து சந்தோஷமடைவார்கள்" என்று முடிகிறது நாவல்! கமலாக்ஷி-விஜயரங்கம் கலியாணமாகி ஒரு மாமாங்கமாகி விட்டது. சந்தோஷமாக இருந்தார்கள் எல்லோரும் என்பது வெளிப்படை.

பொன்னுசாமிப்பிள்ளை எழுதிய நாவல்களில் உள்ள ஒரு தனி விசேஷத்தை இங்கு எடுத்துக் கூறவேண்டியது அவசியம். ஞானாம்பிகை என்ற நாவலின் முகவுரையில் ஆசிரியர் பின்வருமாறு எழுதுகிறார். "லௌகிகஸித்தி அடைவதே தற்காலத்தில் பாலர்களுக்கு நோக்கமாக இருக்கின்றது. ஆத்ம விசாரணை செய்வது ஏகதேசமாக இருக்கின்றது. இதற்குப் பரிகாரமாகச் சில பெரியோர்கள் அங்கங்கே சன்மார்க்கமான காலக்ஷேபங்களை நடத்தி வருகின்றனர். அவர்கள் சங்கீத ஸாஹித்யத்தைச் சார்பாகக் கொண்டு நடத்துதலால் பாலர்களுடைய மனம் சங்கீதத்தில் மாத்திரம் செல்லுகின்றது. ரஸமான கற்பிதக் கதைகளின் இடையில் கதாநாயகர்கள் ஞானபோதம் அடையுமாறு முயற்சி செய்து ஸமய சித்தாந்தத்தை உணர்ந்ததாகப் புனைந்துரைப்பின், பாலர்களுடைய மனம்

அதில் செல்லுதலால் நமது தேசத்தில் வைதிக மார்க்கமும் தளிர்த்தோங்குவதற்கு ஒருமுகாந்தரம் ஏற்படும் என்பதும் இக்கதைகளை எழுதுவதில் யான் ஒரு புடை கொண்டிருக்கும் உட்கருத்து.

"இக்கருத்தைக் கொண்டு பின்வருமாறு செய்திருக்கிறேன், முதல் கற்பிதக் கதையான கமலாக்ஷியில் வேறு ஸமயத்தவருடைய ஆக்ஷேபணைகளுக்கு ஒருவாறு சமாதானம் சொல்லியிருக்கிறது." "இரண்டாவது விஜயஸுந்தரம் என்பதில் பரமுத்தியடையும் உபாயம் சொல்லியிருக்கிறது." அதற்குமேல் அவர் எழுதிய நாவல்களில் சிவஞானசித்தியாரில் கண்ட பன்னிரண்டு சூத்திரக் கருத்துக்களையும் எடுத்துச் சொல்லியிருக்கிறார், ஒவ்வொரு நாவலிலும் பத்தொன்பதாவது அத்தியாயத்தை இதற்கு உபயோகித்துக் கொண்டார் ஆசிரியர் பொன்னுசாமிப் பிள்ளை. ஒரு பிரசங்கியும் அறிவுள்ள வாலிபனும் சேர்ந்து பேசுகிற பேச்சாக, வினு விடையாக, இதை அமைத்து எழுதியிருக்கிறார்.

பொன்னுசாமிப் பிள்ளையின் நாவலைப் படிக்கும்போது அந்த நாட்களின் வாழ்க்கை வளம் நமக்கு ஓரளவுக்குத் தெரிகிறது; ஓரளவுக்கு என்று சொல்வதுதான் நியாயம். ஏனென்றால் கதை சுவாரஸ்யமாக ஓட வேண்டுமே என்பதற்காகச் சில விஷயங்களை அவர் சற்று அதிகப்படுத்தியே எழுதிவந்திருக்கிறார் என்று எண்ண வேண்டியதாக இருக்கிறது. உள்ளதை உள்ளபடியே சித்திரிப்பதில் சம்பவக் கோவையும் அதிசயோக்திகளும், நவரஸங்களும் வராமல் போய்விடலாம் என்பதற்காக ஆங்காங்கே கைச்சரக்கை ஏராளமாகச் சேர்த்துக்கொண்டு தான் ஆசிரியர் வாழ்க்கை விசாரத்தை நடத்தியிருக்கிறார். செந்தமிழ்ச் செல்வர்க்கென்று இந்த நாவலை அர்ப்பணம் செய்த ஆசிரியர்

செந்தமிழ்ச் செல்வர்களின் வாழ்க்கை வழிகளை ஆராயவும் மிகைப்படுத்தித் தீட்டித் திருத்தவும் முயன்றிருக்கிறார் என்பதில் சந்தேகமேயில்லை.

தண்டலம் பாலசுந்தர முதலியார் இந்நூலுக்கு அளித்துள்ள சூசிகையுடன் இதை முடிப்பது பொருந்தும். "....'உயர்மதிகூடலினுய்ந்த பெண்டீந்தமிழ்' என்று ஸ்ரீமணிவாசகப் பெருமான் திருவாய் மலர்ந்தருளும் அருமை வாய்ந்த தமிழ்ப்பாஷையிலே அறம்பொருளின்பம் வீடென்னும் புருஷார்த்தங்கள் நான்கினையும் நம்மனோ ஸ்தூலத்திற்குச் சாதகமாயுள்ள நூல்கள் அளவிறந்திருக்கினும், மாயை வயப்பட்ட மானிட மனோ தத்துவ இலட்சணம் இனைத்தென்பதையும் நல்லொழுக்கத்தால் விளையுமின்பம் இஃதென்பதையும், கூடாவொழுக்கத்தால் நேரிடும் துன்பம் இத்திறத்ததென்பதையும் எளிய வசன நடையில் கதாரூபமாக அஸம்பாவிதமான கற்பனைசங்களை ஒழித்துக் கூறும் நூல்கள் மிகச் சிறுபான்மையே யாதலின் ஸ்ரீமான் தி. ம. பொன்னுசாமிப் பிள்ளை யவர்களியற்றிய கமலாக்ஷி என்னும் இந்நூல் தமிழராம் இரு பாலார்க்கும் அமுதுபோலினித்து நற்பயன் நல்க வல்லதென்பது திண்ணம்."

# பின்னுரை

"நூற்றுக் கணக்கான நாவல்கள் இன்று தமிழில் எழுதப்படுகின்றன" என்று தீனதயாளுவின் முகவுரையிலே 1902-ல் பண்டித நடேச சாஸ்திரி குறிப்பிடுகிறார். இந்த அரை நூற்றாண்டில் நாவல் உற்பத்தி பெருகியிருக்கிறதே தவிரக் குறைந்துவிட்டதாகச் சொல்ல முடியாது. ஆயிரக் கணக்கான நாவல்களில் இந்த ஐந்து ஆதி நாவல் கர்த்தாக்களையும் தொடர்ந்து, தெரிந்து கொண்டோ, தெரியாமலேயோ, பின்பற்றுகிற நாவலாசிரியர்கள் என்று இன்று நம்மிடையே உள்ளவர்கள் சிலரைப் பற்றியும் இங்கு குறிப்பிடுவதில் தவறில்லை என்று நினைக்கிறேன்.

என் பாகுபாடுகள் அப்படியே உண்மை என்றோ, வேறு பாகுபாடுகள் சாத்தியமல்ல என்றோ எண்ண வேண்டிய அவசியமில்லை. நான் படித்த வரையில், என் திறனாய்வுக்கு எட்டுகிற வரையில் சொல்லுகிறேன். மறுத்தும், கூட்டியும் குறைத்தும், வெட்டியும் ஒட்டியும் சொல்ல எல்லோருக்கும் உரிமை யுண்டு. இன்று நமது விமரிசனம் இருக்கும் நிலையில் இச் சிறிய விஷயத்தைப் பெரிதாக முன்னாலே சொல்லிக் கொள்ள வேண்டியதாக இருக்கிறது. ஏனென்றால் "என் பெயரை விட்டுவிட்டான், இது நியாயமா முறையா, என் நாவல் அந்த நாவலாசிரியனின் நாவலுக்கு எப்படி மட்டமாகிவிடும்?" என்றெல்லாம் கேட்கிறவர்கள் நம்மிடையே பெருகிக் கொண்டிருக்கிறார்கள். "மூன்று லக்ஷம் பேர் படிக்கிற பத்திரிகையில் வெளிவந்த என் நாவல் நன்றாக இல்லையாம்! புஸ்தகமாக வந்தும் நாலாயிரம்

